# திருச்சிறுப்பள்ளியின் புராதன சரித்திரம்.

M. S. நடேச அய்யர்

இயற்றியது.





அழகிரிசாமி நாயுடு & சன்ஸ்,
சென்ட்றல் புக் டிப்போ,
ப்பக்குளம், திருச்சிறுப்பள்ளி.
1924. [தபால் சார்ஜ் வேறு.

# திருச்சினாப்பள்ளி

# புராதன சரித்திரம்

M. S. நடேசய்யர்

இயற்றியது



அ. அழகிரிஸாமி நாயுடு & ஸன்ஸ்

செண்ட்ரல் புக் டெபோ

தெப்பகுளம்—திருச்சினாப்பள்ளி

1924

விலை அணா 5] [தபால் சார்ஜ் வேறு

# FOREWORD.

Most of us live in the present and few of us care to know the ancient history of our own town or village. Very few even know the meaning of the name of the town where they reside. The Ancient History of Trichinopoly is an interesting book that should be welcomed by the citizens of Trichinopoly, because it gives in a small compass the several vicissitudes through which the city had passed until it finally came into the hands of the British in 1801. The facts relating to the rise and fall of the many kingdoms that held sway over Trichinopoly for a period either short or long are given in chronological order and in a language which is simple and clear, easily understandable by pupils of an elementary school.

The last chapter giving a skeleton of the present-day British administration will serve as a good introduction to a study of Civics, and the author should be congratulated on having brought out such a booklet which, I am sure, will be found useful by both the young and the old.

S. K. DEVASIKHAMANI, B.A., L.T.,

*Headmaster, B. H. C. High School and*

*Vice-President District Educational Council, Trichinopoly.*

31—5—'24.

# முன்னுரை.

நம்மில் பலர் இக்காலத்தில் வஸிப்பினும் நம் ஸொந்த நகர் அல்லது கிராமத்தின் புராதன சரித்திரத்தை அறிய விருப்பமில்லாமல் இருக்கிறோம். தாம் குடியிருக்கும் பட்டணத்தின் பெயரின் அர்த்தம்கூட பலருக்குத் தெரியாது. திருச்சினப்பள்ளி புராதன சரித்திரம் இந்நகர் வாஸிகள் ஆவலுடன் ஏற்கவேண்டிய புஸ்தகம். ஏனெனில், இப்பட்டணத்திற்கு ஏற்பட்டிருக்கும் அதிர்ஷ்ட பேதங்களும் கடைசியாய் a. d. 1801-ல் ஆங்கிலர் வசம் அது சென்றதும் சுருக்கமாய எழுதப்பட்டிருக்கின்றன. ஸ்வல்பகாலமோ தீர்க்ககாலமோ திருச்சினப்பள்ளியில் ஆண்ட அரச வம்சங்கள் பலவற்றின் சரித்திரம் காலாநுஸாரமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. புஸ்தக நடையும் எலிமெண்டரி பாடசாலை மாணவர் சுலபமாய் அறிந்துகொள்ளுமாறு அமைந்திருக்கிறது.

தற்கால அரசாக்ஷியைப்பற்றிச் சொல்லியிருக்கும் கடைசி அதிகாரம் ஸிவிக்ஸிற்கு நல்ல ஆரம்பமாகவும் ஆதாரமாகவும் ஏற்படவேண்டியது. சிறுவர் முதியோர் பலரும் உபயோகிக்கக்கூடிய இச்சிறு நூலை யெழுதிய கிரந்த கர்த்தாவை நாம் கட்டாயம் ஆசிகூறவேண்டும்.

ரக்தாக்ஷி-ஹூ வைகாசி-மீ

எஸ். கே. தேவசிகாமணி, பி.எ., எல்.டி.,
ஹெட்மாஸ்டர், B. H. C. ஹைஸ்கூல், &
வைஸ்பிரஸிடெண்டு, டிஸ்டிரிக்ட் எடுக்கேஷனல்
கௌன்ஸில், திருச்சினப்பள்ளி.

# அட்டவணை.

# திருச்சினுப்பள்ளி
# புராதன சரித்திரம்

## 1-ம் அதிகாரம்.

### திரிசிரபுரம்.

ராவணன் லங்கையில் அரசுபுரிந்த காலத்தில் அவன் சகோதரன் திரிசிரஸ்* காவேரிக்கரையில் ஒரு காட்டில் வசித்தான். அவனுடைய வாஸஸ்தலம் பிற்காலத்தில் ஒரு நகரமாயமைந்தது. அந்நகருக்கு திரிசிரபுரமென்று பெயர். திரிசிரஸ் சிவபக்தனுனதாலும், பரமசிவனைக் குறித்துத் தபஸ்செய்தமையாலும், மலையின் உச்சியில் சிவ பெருமானுக்கும் உமையன்னைக்கும் விநாயகக் கடவுளுக்கும் ஆலயம் கட்டிவைத்தபடியாலும், பகவான் அவனுக்குப் பிரத்தியக்ஷமாகி 'இந்நகருக்கு உன் பெயரே வைக்கப்படட்டும்' என வரமளித்தார். திரிசிராப்பள்ளி (திரிசிரஸ்+பள்ளி=நகரம்) என்றும் திருசிலாப்பள்ளி (திரு=பரிசுத்தமான அல்லது அழகிய + சிலா=மலையையுடைய+பள்ளி=நகரம்) என்றும் இவ்வூருக்கு வேறு நாமங்கள் உண்டு. திருச்சினுப்பள்ளி யென்பது ஜனங்கள் மருவி வழங்கும் பிசகான பெயர்.

---

## 2-ம் அதிகாரம்.

### சோழர் நாடு.

திரிசிரபுரத்தில் வெகு காலமாய் இருந்த ஜனங்கள் சோழர். அவர் ஆரியரா அனாரியரா என்றாவது எங்கிருந்து எவ்விதம் இவ்வூருக்கு வந்தார் என்றாவது சொல்லமுடியாது. பாரதவருஷத்தில் புராதனமாய் இருந்த 56 தேசங்களுள் அவர் நாடு ஒன்று என்பதும் அவர் உன்னத நாகரிக

---

* மூன்று தலைகளையுடையவன்.

நிலையில் இருந்தார் என்பதும் நமக்குத் தெரிகிறது. ராமாயணுதி இதிஹாஸ காலங்களில் அவர் ஊர் தண்டகாரண்யத்தின் ஒரு பாகமாகயிருந்ததாகத் தோன்றுகிறது. திருச்சி ஜில்லாவின் வடக்கேயுள்ள கொல்லிமலைப் பிறதேசம் தான் கிஷ்கிந்தாபுரமென்றும் பெரம்பலூர் தாலூகாவிலுள்ள வாலிக்கொண்டாபுரந் தான் வாலி யிறந்து விழுந்த இடமென்றும் அநேகர் சொல்லுகிறார்கள். ஸாலீவாஹன சகாப்தத்துக்கு 338 * வருஷங்களுக்கு முன் (B. C. 260) உண்டான அசோக சக்ரவர்த்தியினுடைய சிலாசாஸனங்களிலும் ஸா. 52-ல் (A. D. 130) இருந்த கிரீக் பூதத்வ சாஸ்திரிகளின் கிரந்தங்களிலும் சோழர்களைப்பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது. ஸாலீவாஹன சகாப்தத்துக்கு 325 வருஷங்களுக்கு முன் (B. C. 247) சோழமன்னர் லங்கைக்கு வெற்றியுடன் சென்றதாகவும் அங்நாட்டு ராஜ வம்ச சரித்திரங்களிலிருந்து தெரியவருகிறது.

சோழர் நாட்டின் எல்லைகள் :—

கடல் கிழக்குத் தெற்குக்கரை பொருவெள்ளாறு
குடதிசையிற் கோட்டைக்கரையாம்—வடதிசை
ஏணுட்டுப்பண்ணை யிருபத்துநாற்காதம்
சோணுட்டுக்கெல்லையெனச் சொல்.

இது ஒரு பழமையான செய்யுள். இதில் சோழநாட்டின் எல்லைகள் குறிக்கப்பட்டுள்ளன. வடக்கே பெண்ணுறும் † கிழக்கே சமுத்திரமும் தெற்கே வெள்ளாறும்

* இப்புத்தக முழுவதும் வருஷங்கள் ஸாலீவாஹன சகாப்தத்தில் குறிக்கப்பட்டிருக்கின்றன. கிறீஸ்து சகாப்தம் (A. D.) தெரியவேண்டுமானுல் ஸாலீவாஹன வருஷத்துடன் 78-ஐக் கூட்டவேண்டும்.

† சோழ நாட்டின் வடக்கெல்லை வேங்கடாத்திரி அல்லது திருப்பதியென்றும் சிலர் சொல்லுவார்கள்.

மேற்கே கோட்டைக் கரையும் கரைப்போட்டானூரும் சோழ மண்டலத்தின் விஸ்தீர்ணத்தைக்குறிக்கும். மேற் கெல்லைகளின் அடையாளங்கள் இப்பொழுதும் போத்தனூ ருக்கு சமீபத்திலும் குளித்தலை தாலூகாவிலும் காணப்படு கின்றன.

சோழர் நாகரிகம் :—சோழர்கள் அயல் நாட்டார்களுடன் நேசம் பாராட்டி வந்தார்கள். யுத்தப்பயிற்சியில் ஸ்பார்ட்டர்களுக்கும் மேலானவர்கள். க்ருஷியை வெகு கவனமாய் நடத்திவந்தார்கள். தஞ்சாவூர் பிறதேசத்தின் செழுமைக்குக் காரணமான கல்லணையைக் கட்டுவித்தவர் சோழ மன்னரே. அவர்களால் கட்டப்பட்ட பழய அணை தான் இப்பொழுது இருக்கும் கட்டடத்தின் அஸ்திவாரம். காவேரியிலிருந்து பிரியும் பல கால்வாய்கள் அவர்களால் தான் வெட்டப்பட்டன. உய்யக்கொண்டானின் தலைக் குமிழியைப்பற்றி மூன்றுவது குலோத்துங்கச் சோழனின் சிலா சாஸனம் அகப்பட்டிருக்கிறது. முசிரிக்கு சமீபத் திலுள்ள பெரிய வாய்க்காலின் தலைப்பு மூன்றுவது ராஜராஜ ணால் கட்டப்பட்டது. கஜாரண்யம் என்கிற திருவானைக் காவலில் ஜம்புநாதருக்கு கோச்செங்கட் சோழ மன்னன் ஆலயம் கட்டிவைத்ததாக சிலாசாஸனம் கோவில் மதில் களில் சமீப காலத்தில் காணப்பட்டது. தர்ம வர்மச்சோழ மன்னன் ஸ்ரீரங்கத்தில் ரெங்கனுதருக்கும் குணசேகரத்தில் ஸ்ரீநிவாஸனுக்கும் உறையூரில் பரமபக்தையான தன்குமாரி நாச்சியாருக்கும் ஆலயங்கள் கட்டி வைத்ததாகவும் சிலாசா ஸனங்கள் கிடைத்திருக்கின்றன.

நிலங்கள் வெகு கவனமாய் சர்வே செய்யப்பட்டன. 52,488,800,000-ல் ஒன்று வேலி நிலங்கூட அளவிடப் பட்டு சர்க்கார் தீர்வைக்கு கொண்டுவரப்பட்டது.

சோழமன்னர் கட்டிய பல அழகிய ஆலயங்களிலிரு ந்து சோழர்களின் சிற்ப சாஸ்திரத் திறமையை நாம் அறியக் கூடும்.

ராஜ்யபாரம் பூராவும் கிராம பஞ்சாயத்துக்களால் வகிக்கப்பட்டது. ஒவ்வொரு கிராம பஞ்சாயத்தும் கூடுவதற்கு ஸபாமண்டபங்களுமிருந்தன. வட ஆற்காடு ஜில்லாவில் கண்டெடுக்கப்பட்ட ஒரு சாஸனத்திலிருந்து சோழர்களால் கட்டிவைக்கப்பட்ட ஒரு பஞ்சாயத்து மண்டபத்தில் ஓர் வித்தியாலயமும் மாணவர்களுக்கு போஜன சாலையும் வைத்தியசாலையும் வைக்கப்பட்டிருந்ததாகவும் தெரிகிறது. வித்தியார்த்திகளுக்கு சனிக்கிழமைகளில் ஸ்நானம் செய்ய எண்ணெய்யும் இராக்காலங்களுக்கு விளக்குகளும் கொடுக்கப்பட்டன. வைத்தியசாலையில் 15 வியாதிக்காரர்களுக்கு இடமும் (beds) அவைகளுக்கு வேண்டிய ஸவுகரியங்களும் இருந்தன. அநேக வேலைக்காரர்களும் இருந்தார்கள். பஞ்சாயத்துகள் அதிகாரம் செலுத்தாத ராஜாங்க விஷயம் ஒன்றுமில்லை. ஒவ்வொரு பஞ்சாயத்துக்குக் கீழும் கிளை சபைகள் பிரத்தியேக வேலைகளை மேல்பார்த்தன. அநேக கிராமங்கள் சேர்ந்து ஒரு அதிகாரியின் கீழுள்ள ஜில்லாவாகவும் அநேக ஜில்லாக்கள் சேர்ந்து ஒரு மாகாணமாகவும் கணக்கிடப்பட்டிருந்தன.

சோழர்கள் வியாபாரம் விஸ்தாரமாய்ச் செய்தார்கள். ஐரோப்பாவிலுள்ள ரோமன் ராஜ்யத்தோடும் ஸமுத்திரத்துக்கப்பாலுள்ள இன்னும் மற்ற ஊர்களோடும் கப்பல் மூலம் போக்கு வரத்து ஏற்பட்டிருந்தது. வடபர்வதங்களிலிருந்து ஸ்வர்ணமும் ரத்னங்களும் மேல்மலைகளிலிருந்து சந்தனம் அகில் முதலிய மரங்களும் தெற்கு சமுத்திரத்திலிருந்து முத்துக்களும் கீழ் கடலிலிருந்து பவழமும் கங்கை ப்ராந்த்யத்தில் விளையும் பொருள்களும் காவேரிக்

கனை தான்யங்களும் பர்மா கைத்தொழிற் சாமான்களும் லங்கை முதலிய நாடுகளிலிருந்து ஆகாரத்துக்கு வேண்டிய இதர சாமான்களும் சமுத்திரத்துக்கப்பால் வெகு தூரத்தி லிருந்து குதிரைகளும் மரக்கலங்களில் கொண்டுவரப்பட்ட மிளகும் காவேரிப் பட்டணத்தில் சோழர் கடைகளில் ஏராளமாய்க் காணப்பட்டன. தேசம் வெகு செழிப்பாக வும் ஜனங்கள் நாகரிகமுள்ளவர்களாகவும் மன்னர்கள் நீதி மான்களாகவும் தெய்வபக்தி குன்றாதவர்களாகவும் இருந் திருக்கவேண்டும்.

---

## 3-ம் அதிகாரம்.

## உறையூர் மண்மாரி.

கரிகாலச்சோழன் :—சாரமாமுனி திரிசிராமலையில் நந்த வனத்தில் தாயுமானவர் * பூஜைக்காகப் பயிர் செய்திருந்த ஜவந்தி புஷ்பங்களை கர்ப்பிணியாயிருந்த உறையூர் சோழ மன்னன் மனைவிக்காக ராஜ ஸேவகர்கள் திருடிப்போனார் கள். ராஜன் சேவகரைக் கண்டிக்காததால் முனி கோபங் கொண்டு "உறையூர் மண்மாரியால் பாழாகக்கடவது" என்று சாபமிட்டார். அப்படியே பட்டணமும் அழிந்து அரசனும் இறந்தான். ராஜபத்னி காவேரிப்பட்டணம் சென்று அங்கு ஓர் ஆண் மகவு ஈன்றாள். மந்திரி கெட்ட எண்ணங்கொண்டு காவேரிப் பட்டணத்தில் அரசகுமாரன்

---

* திரிசிரபுரத்திலிருந்த தனகுப்தன் என்னும் வைசியன் மனைவி சிவபக்தியில் சிறந்தவளாய் ஒழுகிவருநாளில் கர்ப்பவதி யாகிப் பிரஸவித்தாள். அச்சமயம் அவள் தாய் காவேரிப் பெருக் கால் அக்கரையில் நின்றுவிட சிவபிரான் அத்தாயைப்போல் உருவங்கொண்டு அப்பெண்ணிடஞ் சென்று பிரஸவ அறையில் அவளுக்கு உதவிபுரிந்தார். அதுபற்றியே ஸ்வாமிக்கு வடமொழி யில் மாத்ருபூதர் என்றும் தென்மொழியில் தாயுமானவர் என் றும் பெயர் வழங்கலாயிற்று.

வசித்த வீட்டைக் கொளுத்திவிட்டான். காலில் பட்ட காயத்துடன்மட்டும் அரசகுமாரன் தப்பித்தான். அவனுக்குத்தான் கரிகாலச்சோழன் அல்லது ஹஸ்திபாதன் என்று பெயர். இவன் திரிசிராமலேக்கு வந்து சாரமாமுனியை அடிபணிந்து தாயுமானவரைச் சேவித்து உறையூரைப் புதுப்பித்தான். இவன்தான் 1080 அடி நீளமும் 80 அடி அகலமும் 18 அடி உயரமும் உள்ள கல்லணையைக் கட்டினது. சேரபாண்டியர்களுடன் தஞ்சாவூர் ஜில்லா வெண்ணிலில் யுத்தம் செய்து அவர்களைத் தோற்கடித்தான். இவன் ஆக்ஷிசெய்த காலம் ஸா. 17-க்கு (A. D. 95.) முந்தின 45 வருஷங்கள்.

---

## 4-ம் அதிகாரம்.

### சோழமன்னர்.

நலன்கிள்ளி (18-27):—இவன் கரிகாலன் குமாரன். அடிக்கடி சேரபாண்டியருடன் சண்டை செய்தான். பாண்டியநாட்டின் 7 பலமான கோட்டைகளைத் தன்னுடைய தாக்கிக்கொண்டான்.

கிள்ளிவல்லன், பெருநார்க்கிள்ளி (28-72):—நலன் கிள்ளி இறந்தபின் ராஜ வம்சத்தில் பிறந்த 9 பேர்கள் ராஜ்யத்தைத் தங்களுள் வீதித்துக்கொள்ளும்பொருட்டு பெருங் கலகம் செய்தார்கள். நலன்கிள்ளியின் குமாரன் கிள்ளி வல்லன் கலகத்தையடக்கி ராஜ்யத்தையடைந்தான். சேர பாண்டியருடன் செய்த யுத்தங்களில் இவனுக்கு வெற்றியும் கிடைத்தது. இவனுக்குப் பிறகு பட்டமடைந்த பெருநார்க்கிள்ளி ராஜஸூய யாகம் நடத்தினன்.

கோச்சேன்னிக்கண்ணன், கோக்கிள்ளி:—சோழ நாட்டையாண்ட பிந்திய அரசர்களுள் கொச்செங்னிக்

கண்ணன் பல ஆலயங்கள் கட்டினன். இதற்குப் பிறகு சுமார் 500 வருஷம் வரையில் சோழமன்னரைப்பற்றி ஒன்றும் தெரியாது.

---

## 5-ம் அதிகாரம்.

### பல்லவர்.

தென் இந்தியாவில் சோழர் அரசு செலுத்துங்காலத்தில் பல்லவர் காஞ்சீபுரத்தில் ஆண்டனர். அவர்கள் எவர் என்ருவது எவ்விதம் சோழநாட்டைக் கைப்பற்றினர்கள் என்ருவது சொல்லமுடியாது. தென் ஆற்காடு ஜில்லாவில் பனைமலையில் சமீபத்தில் கண்டெடுக்கப்பட்ட இரண்டாவது ராஜஸிம்ஹ பல்லவனுடைய சாஸனத்திலிருந்து அசுவத்தாமன்துரோணி என்ற ரிஷிக்கு வல்லவன் என்று ஒரு குமாரன் இருந்ததாகவும் அவனுடைய சந்ததியாரே பல்லவர் என்றும் அவர்கள் பாரத்துவாஜ வம்சமென்றும் அசுவமேதயாகங்கள் பல செய்தார்கள் என்றும் தெரிகிறது. பல்லவ கிரந்த எழுத்தில் 'வ' வும் 'ப' வும் அதிக வேற்றுமைப் படாமையால் 'வல்லவர்' 'பல்லவர்' ஆக மாறியிருக்கலாம். மஹாபாரதத்தில் கௌரவர்களுக்கு ஆசாரியராயிருந்த துரோணரின் புத்திரன் அசுவத்தாமனின் சந்ததியிலேற்பட்ட ஒருவன்தான் இந்த அசுவத்தாமன் துரோணியாய் இருக்கவேண்டும் என்று தோன்றுகிறது. இவர்கள் கஞ்சம் முதல் தெற்கு கோடி வரையில் அரசு செலுத்தியதாகவும் பலமான கோட்டைகள் பல கட்டினதாகவும் தண்ணீர் இல்லாத இடங்களில் ஏரிகள் வெட்டினதாகவும் கைத்தொழில்களை விர்த்தி செய்ததாகவும் சமுத்திர மார்க்கமாய் வியாபாரம் செய்ததாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. திரிசிராமலையில் உச்சிப் பிள்ளையார் கோவிலுக்குக் கீழே தென்புறத்திலும் மலைக்கோட்டை வீதியில் தென்

புறத்திலும் பாறையைக் குடைந்தெடுத்த இரு குகைகள் காணப்படுகின்றன. ஸிம்ஹவிஷ்ணு, மஹேந்திரவர்மன் முதலிய பல்லவ மன்னர்கள் எழுதி வைத்திருக்கும் சிலா சாஸனங்கள் இக்குகைகளில் இருக்கின்றன.

மேலசாளுக்கியர்கள் சோழபல்லவர்களை வென்று காவேரியைத் தாண்டிச் சேரபாண்டியர் நாடுகளுக்குச் சென்றனர். மண்ணைக்குடியில் பாண்டியனைத் தோற் கடித்த பல்லவ நந்திவர்மன் 755 முதல் 769 வரையில் ஆண்ட விக்ரமாதித்ய சாளுக்கியனால் தோற்கடிக்கப்பட் டான். சுமார் நூறு வருஷங்களுக்குப்பின் விஜய நிருப துங்க விக்ரம வர்ம பல்லவன் சோழநாட்டையாண்டதாக லால்குடியிலும் தஞ்சாவூரிலும் சாஸனங்கள் கிடைத்திருக் கின்றன.

பல்லவராண்ட காலத்தில் தென்னாட்டில் பௌத்த ஜைன மதங்கள் பரவின. சில பல்லவர்களும் சைவத்தை விட்டு பௌத்த ஜைன மதங்களைக் கைப்பற்றினார்கள். பௌத்த ஜைனர்களுக்கு திருவள்ளரை மலையில் ஒரு குகை யும் பழயசங்கடத்தில் (பழய ஜயங்கொண்ட சோழபுரம்) ஒரு மண்டபமும் குளமும் பல்லவர்களால் உண்டாக்கப் பட்டதாகச் சொல்லப்படுகின்றன.

திருஞானஸம்பந்தர் :—திரும்பவும் தென்னாட்டில் சை வத்தை ஸ்தாபிக்கும்பொருட்டு இவர் பிறந்தார். தஞ்சா வூர் ஜில்லாவில் சீர்காழி நகரத்தில் அந்தணர் குலத்துதித்து இளம்பிராயத்திலேயே ஞானமடைந்து சஞ்சாரம் செய் யத் தொடங்கினார். மதுரையில் பாண்டிய மன்னனைச் சைவத்துக்குத் திருப்பி சமணர்களில் அனேகரைக் கழுவி லேற்றுவித்தார். காஞ்சீபுரத்திற்குச்சென்று பல்லவமன் னனைத் திருப்பயத்தனித்ததில் முடியாமல் போனதால் சோழரின் உதவியைக்கொண்டு அவனை வென்றார். காலக்

கிரமத்தில் பல்லவர் வம்சம் அழிந்துபோயிற்று. இக்காலத்திய வன்னியர், படையாச்சிகள், புதுக்கோட்டை ராஜர்கள், இன்னும் சிலர் தாம் பல்லவரைச் சேர்ந்தவர் என்று சொல்லுகிறார்கள்.

---

## 6-ம் அதிகாரம்.

## சோழமன்னர் மீட்சி.

ஸா. 9-வது நூற்றாண்டின் ஆரம்பத்தில் விஜயாலயச் சோழன் தன் ஆட்சியைப்பரப்பி சோழருக்குப் போர்ப் பயிற்சி செய்வித்தான்.

ஆதித்யன் I (816-828):—சேலம் கோயம்புத்தூர் ஜில்லாக்கள் அடங்கிய கொங்கநாட்டை 816-ல் விஜயாலயன் குமாரன் ஆதித்யன் I வென்றான். பழய பல்லவ ராஜ்யமாகிய தொண்டைமண்டல (தென் ஆற்காடு, வட ஆற்காடு, செங்கல்பட்டு ஜில்லாக்கள்) த்தையும் தனதாக்ஷிக்குக் கொணர்ந்தான்.

பரந்தகன் I (828-868):—இவன் பாணர், கங்கையர், பாண்டியர், சிங்களர் முதலியோரைத் தோற்கடித்தான். தான் ஜெயித்த நாடுகளிலிருந்து கொண்டுவந்த ஸ்வர்ணம் பூராவும் சிதம்பரம் சிவாலயத்துக்குக் கொடுத்தான். ஹேமகர்ப்பம், துலாபாரம் முதலிய பல நற்கருமங்கள்செய்து, அந்தணருக்குப் பூதானம் முதலிய பல கொடைகளும் செய்து, அனேக ஆலயங்களும் கட்டுவித்தான். அவன் ராஜதானி காஞ்சீபுரத்திலும் தஞ்சாவூரிலும் இருந்தன.

ராஜாதித்யன் (869-871):—இவன் தக்கோலத்தில் 871-ல் ராஷ்ட்ரகூட கிருஷ்ணராஜனால் யுத்தத்தில் கொல்லப்பட்டான்.

அரிஞ்சவன், கண்டாராதித்யன், மதுராந்தகன், பரந்தகன் II, ஆதித்யன் II :—வீரபாண்டியனைத் தோற்கடித்து ராஷ்ட்ரகூடனையும் துறத்தினவன் ஆதித்தியன் II.

ராஜராஜன் I (907-935) :— சோழ மன்னர்களுள் மிகக் கீர்த்திவாய்ந்தவன் ராஜராஜன் I. அவன் காலத்தில் நாட்டுக்கு உண்டான ஸம்பத்து நூறு வருஷங்கள் வரையில் மாறவில்லை. மேற்கே கொல்லம் குடகுவரையிலும் தெற்கே லங்கை கன்னியாகுமாரிவரையிலும் வடக்கே உத்கல நாடுவரையிலும் அவன் ஆட்சி எட்டிற்று. 916-ல் சேர நாட்டிற்கு ஒரு கப்பல்படை யனுப்பி ஒரு துறைமுகத்தைப் பிடித்தழித்தான். சேரபாண்டியர்களை ஒவ்வொரு யுத்தத்திலும் தோற்கடித்தான். 920-ல் கங்கையர், நொலம்பர், பாண்டியர் முதலியோரைத் தோற்கடித்து தடிகைப்பாடி, வெங்கி, குடகு முதலிய ஊர்களைப் பிடித்தான். 924-ல் கொல்லம், கலிங்கம், லங்கை முதலிய இடங்களைக் கைப்பற்றினன். 926-ல் சாளுக்கியர்களைத் தோற்கடித்தான். 933-ல் லக்ஷத் தீவுகளையும் தனது வசமாக்கிக் கொண்டான்.

தஞ்சாவூரில் பிருகதீசுவரஸ்வாமி கோவிலைக் கட்டினன். புறமதஸ்தரை ஹிம்ஸிக்காமல் தனக்குக் கீழ்ப்பட்ட சிற்றரசன் ஒருவன் கட்டிய பௌத்தாலயத்தைக் கண்டு ஸந்தோஷித்தான். க்ருஷியை விர்த்திசெய்தான். கிராம பரிபாலனம் வெகு உத்தமமாய் நடத்திவந்தான்.

ராஜேந்திரன் I (936-966) :—இவன் ராஜராஜனுக்குப் பிறகு வந்த அவன் குமாரன். இவன் கங்கைநதி வரையில் வெற்றியுடன் சென்று கங்கைகொண்ட சோழன் எனப் பெயரும் பூண்டான். பர்மாவுக்குக் கப்பல் படையனுப்பி நிக்கோபார் தீவுகளையும் வென்றான். தஞ்சாவூர் கோவிலைப்

போலவே ஜெயங்கொண்டசோழபுரத்தில் ஒரு ஆலயத்தையுங் கட்டினான்.

ராஜாதிராஜன் I (967-975):—940 முதல் யுவராஜாவாயிருந்துவந்த ராஜாதிராஜன் பட்டத்துக்கு வந்த பிறகு சேரபாண்டிய சிங்களர்கள் கலகம் செய்தார்கள். அவர்கள் அடக்கப்பட்டபிறகு அவன் சாளுக்கியருடன் யுத்தம் செய்து அவர்களை கொல்ஹாபுரம் வரை விரட்டியடித்து அசுவமேதயாகமும் செய்தான். 975-ல் கொப்பத்தில் சாளுக்கியருடன் நடந்த சண்டையிலிறந்தான்.

ராஜேந்திரன் II (976-986):—

வீரராஜேந்திரன் (987-990):—இவன் சேரபாண்டியருடன் யுத்தம்செய்து வெற்றியடைந்தபின் வெங்கியை மீட்டான். சாளுக்கியருடன் நடந்த ஐந்து போர்களிலும் சோழமன்னனே ஜெயம் பெற்றான். துங்கை பத்ரா நதிகள் கூடும் குடலியில் கடைசியாய் அவர்களைத் தோற்கடித்தபோதிலும் அவர்களுள் முதன்மையான விக்ரமாதித்யனுக்குத் தன் குமாரியைக் கல்யாணம் செய்வித்து சாளுக்கிய ராஜ்யத்தையும் அவனிடம் ஒப்பித்தான். *

* ராஜராஜச்சோழன் I வெங்கியிலாண்ட விமலாதித்ய சாளுக்கியனுக்குத் தன் குமாரியைக் கொடுத்தான். இவ்விமலாதித்யன் 945-ல் இறந்தான். அவன் குமாரன் ராஜராஜ சாளுக்கியன் தன் மாமன் ராஜேந்திரச் சோழனின் குமாரியை மணம்புரிந்துகொண்டு 985 வரையிலாண்டான். அவன் குமாரன் குலோத்துங்கனை ராஜேந்திரச்சோழன் I ஸ்வீகாரம் எடுத்துக்கொண்டதால் அவன் ஸகோதரன் விஜயாதித்யனுக்கு பட்டம் கிடைத்தது. வீரராஜேந்திரச்சோழன் மேலேசொல்லியபடி வெங்கியைப் பிடித்தபோது தஞ்சையிலாண்ட குலோத்துங்கச் சோழன் I-ஆல் (ராஜேந்திரச் சோழன் I-இன் ஸ்வீகார புத்திரன்) ஹிம்ஸிக்கப்பட்ட விஜயாதித்ய சாளுக்கியனுக்கு உதவிபுரிந்தான்போலும். அல்லது 986-ல் வெங்கியின்மேல் படையெடுத்த விக்ரமாதித்ய மேலசாளுக்கியன் விஜயாதித்யனை ஹிம்ஸித்திருக்கக்கூடும். எப்படியிருந்தாலும் விக்ரமாதித்ய மேல சாளுக்

ஆதிராஜேந்திரன் (991-992) :—வீரராஜேந்திரன் இறந்தபிறகு பட்டத்துக்கு வந்த ஆதிராஜேந்திரன், ராஜ்யத்தில் நடந்த ஓர் கலகத்தில் கொல்லப்பட்டான். பட்டத்துக்குரியவன் குலோத்துங்கச் சோழன் I ஆதலால் அவன் தான் சோழ மன்னனைக் கொன்றிருக்கவேண்டுமென்று நினைத்து அவன் மைத்துனன் விக்ரமாதித்ய மேல சாளுக்கியன் யுத்தத்துக்கு வந்தான். 4 வருஷம் கடும் போர் நடந்தது. குலோத்துங்கன் வெற்றிபெற்று ராஜ்பமடைந்தான்.

குலோத்துங்கன் I (993-1040) :— பால்யத்திலேயே தன் பாட்டனுருடைய பிரியத்துக்குப் பாத்திரமாகி அவனால் ஸ்வீகாரமெடுத்துக்கொள்ளப்பட்ட குலோத்துங்கன் சாளுக்கிய நாட்டிற்கும் சோழநாட்டிற்கும் மன்னனுனன். தான் சோழ நாட்டிலிருந்துகொண்டு தன் ஜனக சிறிய தகப்பன் விஜயாதித்யனையே ராஜப்பிரதிநிதியாய் வெங்கியில் ஸ்தாபித்தான். இவன் காலத்தில்தான் சோழநாட்டிலிருந்து லங்கை பிரிந்தது. இவன் சேரபாண்டியர்களின் கலகங்களை அடக்கி திருவாங்கூர் எல்லைக்குச் சமீபமாயுள்ள கோட்டாற்றில் ஒரு ஸேனையை பாதுகாப்புக்காக வைத்தான். கலிங்கர், கங்கையர், இவர்கள் நாடுகளை மீளவும் சோழ நாட்டுடன் சேர்த்தான்.

உள்நாட்டுச் சுங்கவரிகளை தள்ளுபடிசெய்து நிலங்களை ரீ-ஸர்வேயிற்கு கொணர்ந்தான்.

ஜயங்கொண்டசோழபுரத்தில் தன் ராஜதானியை ஏற்படுத்தியிருந்தான். சமயங்களில் காஞ்சீபுரத்தில் வஸிப்பதும் உண்டு.

---

கியனுக்குத்தான் வீரராஜேந்திரச் சோழன் தன் மகளைக் கொடுத்தது. சாளுக்கியர்களுள் ஏற்பட்டிருந்த குடும்ப வியவஹாரங்களைச் சோழ மன்னன் தீர்த்துவைத்திருக்கவேண்டுமென்று தோன்றுகிறது.

விக்ரமன் (1041-1057) :— இவன் சாஸனங்களுள் ஒன்று தஞ்சாவூருக்கருகிலுள்ள திருவையாற்றில் கண்டெடுக்கப்பட்டிருக்கிறது.

குலோத்துங்கன் II (1058-1068) :—

ராஜராஜன் II (1069-1093) :—பிறகு ஆண்ட சோழ மன்னர்களைப்பற்றி அதிகமாய் ஒன்றும் தெரியவில்லை. பாண்டியர் மீளவும் தம் ஸ்வாதந்திரியத்தை அடைந்திருக்க வேண்டும்.

ராஜாதிராஜன் II (1094-1100) :—பாண்டியநாட்டு ஆதிபத்யச் சண்டையில் இவன் தலையிட்டுக் கொண்டான். லங்கையரசன் சோழர் விரோதிகளுடன் சேர்ந்துகொண்டு மதுரையில் வெற்றிபெற்றதும் தவிர, வடக்கேவந்து சோழ நாட்டில் பட்டுக்கோட்டை தாலூக்காவில் சில கிராமங்களைக் கொளுத்திவிட்டான். வரும்வழியில் ராமேசுவரத்தில் புகுந்து கோவில்கதவைப் பேர்த்து சிவனடியாருக்கிடைஞ்சல்செய்து கோவில் ஆபரணங்களையும் இதர ஸொத்துக்களையும் கொண்டுபோய்விட்டான். ஆனால் சோழர் அவற்றை சீக்கிரம் மீட்டனர்.

குலோத்துங்கன் III (1101-1137) :—குலோத்துங்கச்சோழன் III சிங்களரைத் தோற்கடித்து மதுரையை மீட்டு தனக்குக் கீழ்ப்பட்ட ஒருவனை பாண்டிய நாட்டினதிபதியாய் நியமித்தான்.

ராஜராஜன் III (1138-1166) :—பாண்டியர்கள் மறுபடியும் கலகம்செய்து தங்கள் மன்னன் மகாவர்ம சுந்தர பாண்டியனுடன் வந்து தஞ்சாவூர், உறையூர் முதலிய நகரங்களை அழித்தனர். ஆனால் ராஜ்யம் திரும்பவும் சோழ மன்னனிடமே கொடுக்கப்பட்டது. அவன் சாஸனங்கள் திருக்காட்டுப்பள்ளியிலும் ஸ்ரீரங்கத்திலும் அகப்பட்டிருக்கின்றன.

இந்த ராஜராஜன் III 1152-ல் பல்லவர்களால் தோற்கடிக்கப்பட்டு கைதியானன். ஆனல் மேல சாளுக்கியர் ஸ்தானத்தில் இக்காலம் தோன்றிய ஹாய்ஸாலர் அவனை விடுவித்தனர். பாண்டியரிடமிருந்து சோழர் துன்புறுமல் அவனைக் காப்பாற்றிய வீரஸோமேசுவர ஹாய்ஸாலன் ஸ்ரீரங்கத்துக்குப் பக்கத்தில் ஒரு பட்டணம் நிர்மாணம் செய்து (வீரோசுவரம் - வீரசோமேசுவரபுரத்தின் நாளடைவு மாறுபாடு) அங்கே தன் ராஜதானியை ஸ்தாபித்தான்.*

ராஜேந்திரன் III (1167-1189) :—இவன் ஹாய்ஸாலர்களுடன் யுத்தம் செய்து வீரசோமேசுவரனை 1174-ல் தோற்கடித்தான். பாண்டியரும் ஹாய்ஸாலருடன் போர் புரிந்து 1176-ல் அவர் கோமானைக் கொன்றனர். ஆனல் ஹாய்ஸாலர் பலம் மட்டும் குன்றவில்லை.

* சமீபகாலத்தில் பெங்களூரில் கிடைத்த செப்பு சாஸனத்திலிருந்து வீரஸோமேசுவரன் சமயபுரத்தைக் (விக்ரமபுரி) கட்டினதாகவும் அதற்கு வடக்கே பட்டணம் ரஸ்தாவுக்குக் கீழ்புறம் போஜலீசுவரர் ஆலயத்தையும் நிர்மாணம் செய்ததாகவும் தெரிகிறது. இவன் சாஸனங்கள் திருவானைக்காவல் கோவில் மதில்களிலும் ரத்தினகிரீசுவர மலையிலும் காணப்பட்டிருக்கின்றன.

## சோழமன்னவரின் வம்சாவளி.

- கரிகாலன் (ஸா. 17-வரை)
  - நலன்கிள்ளி (18-27)
    - கிள்ளிவல்லன் (28 முதல்)
    - பெருநார்க்கிள்ளி (72 வரை)
      - கொச்செங்ஙி கண்ணன் (73 முதல்)
        - கொக்கிள்ளி
          - விஜயாலயன்
            - ஆதித்யன் I (816-828)
              - பராந்தகன் I (828-868)
                - ராஜாதித்யன் (869-871)
                - (872 முதல்) அரிஞ்சவன்
                  - கண்டாராதித்யன்
                    - மதுராந்தகன்
                      - பராந்தகன் II
                        - ஆதித்யன் II
                        - ராஜராஜன் I (907-935)

ராஜராஜன் I (907-935)

விமலாதித்ய கீழசாலுக்கியன் = குமாரி

ராஜேந்திரன் I (936-966)

விஜயாதித்யன்

ராஜராஜ சாலுக்கியன் = குமாரி

ராஜாதிராஜன் I (967-975)

ராஜேந்திரன் II (976-986)

குலோத்துங்கன் I (993-1040)

வீரராஜேந்திரன் (987-990)

விக்ரமன் (1041-1057)

விக்ரமாதித்ய மேலசாலுக்கியன் = குமாரி

ஆதிராஜேந்திரன் (991-992)

குலோத்துங்கன் II (1058-1068)

ராஜராஜன் II (1069-1093)

ராஜாதிராஜன் II (1094-1100)

குலோத்துங்கன் III (1101-1137)

ராஜராஜன் III (1138-1166)

ராஜேந்திரன் III (1167-1189)

---

## 7-ம் அதிகாரம்.

### பாண்டிய சேர சிங்களர்.

ஜடாவர்ம சுந்தர பாண்டியன் I (1173-1183) நெல்லூர் வரை சென்று வெற்றிக்கொடி நாட்டினுன். அவன் சாஸனங்கள் நெல்லூர், தஞ்சாவூர், ஸ்ரீரங்கம் முதலிய இடங்களில் காணப்பட்டிருக்கின்றன. அவன் ஸ்ரீரங்கத்தில் ரங்கநாதர் ஆலயத்தின் விமானத்தைத் தங்க முலாம்

பூசி பல திருப்பணிகள் செய்தான். வேறு மூன்று பாண்டியக் கோமான்கள்—மாரவர்மகுலசேகரன் I, ஜடாவர்ம சுந்தர பாண்டியன் II, மாரவர்ம குலசேகரன் II—திருச்சிஞப்பள்ளியிலிருந்ததாகவும் சாஸனங்கள் கிடைத்திருக்கின்றன. ஆனல் பாண்டிய ஹாய்ஸால நாடுகளின் எல்லைகளைத் தீர்மானிக்கவாவது சோழர்களின் அதிகாரம் எம்மட்டுமிருந்ததென்றறியவாவது ஹேதுக்களொன்றுமில்லை.

சோழபாண்டியர் ஒருவருக்கொருவருடன் கடும்போர் புரிந்தனர். ராஜராஜச் சோழன் I (907-935) பாண்டியர் நாட்டைத் தன்னுடையதாக்கிக்கொண்டான். அதற்கு ராஜராஜப் பாண்டியநாடு என்றும் அதன் தலைநகருக்கு சோழேந்திரஸிம்ஹ சதுர்வேதிமங்கலம் என்றும் பெயரிட்டான். ராஜேந்திரச்சோழன் I (936-966) பாண்டிய நாட்டில் 'சோழபாண்டியர்' என்ற பெயருடன் ஒரு புதிய வம்சத்தாரை அரசாக்ஷிசெய்ய நியமித்தான். ராஜாதிராஜச்சோழன் I (967-975) காலத்தில் கலகம் செய்த பாண்டியர் தோற்கடிக்கப்பட்டனர். வீரராஜேந்திரச் சோழன் (987-990) ஆக்ஷிபுரியும்போதும் கலகம் செய்த பாண்டியர் தோற்கடிக்கப்பட்டு அவர் மன்னனும் இறந்தான். குலோத்துங்கச் சோழன் I (993-1040) காலத்திலும் 995-ல் பாண்டியர் கலகம் செய்தனர். சோழமன்னனே அவர் நாட்டை ஜயித்து திருவாங்கூர் எல்லையில் கோட்டாற்றின் சமீபம்வரை சென்று அங்கே ஒரு ஸேனையை பாதுகாப்பிற்காக ஸ்தாபித்துவிட்டு வந்தான். 'சோழபாண்டியர்' என்பவர் 1057 வரையில் சோழருக்குக் கீழ் சிற்றரசராயிருந்து, பிறகு இருந்த இடம் தெரியாமல் மறைந்திருக்கவேண்டும். பாண்டியரும் அக்காலத்துக்குப்பிறகு சோழராதீனத்தை மீறி ஸ்வாதந்திரியமடைந்திருப்பார்கள் போலிருக்கிறது.

ஏறக்குறைய 9-ம் நூற்றாண்டுமுதல் ஸிங்களர் சோழருடன் யுத்தம் செய்ய ஆரம்பித்திருக்கவேண்டும். பரந்தகன் I (828-868) அவர்களைத் தோற்கடித்தான். ராஜராஜன் I (907-935) லங்கைத்தீவு முழுமையும் தன்னுடைய தாக்கிக்கொண்டான். அவனால் ஏற்படுத்தப்பட்டச் சோழ வம்சத்தவர் குலோத்துங்கன் I (993-1040) காலம் வரையில் அத்தீவில் ஆக்ஷி செலுத்தினர். பிற்பாடு சிங்களர் கலகம்செய்து சோழரைத் துறத்திவிட்டார்கள். ராஜாதிராஜன் I (967-975) காலத்திலும் அவர் செய்த கலகம் அடக்கப்பட்டது. ராஜாதிராஜன் II (1094-1100)-ம் குலோத்துங்கன் III (1101-1151)-ம் அவருடன் கடும் போர்புரிந்தபோதிலும் பின்வந்த சோழமன்னரொருவராவது லங்கைத்தீவில் ராஜ்யம் ஸம்பாதித்ததாக தோன்றவில்லை.

ராஜேந்திரன் I (936-966) பர்மாவுக்கு ஸைந்யத்தையனுப்பி அந்நாட்டையும் மலேயா தீவுகளையும் கைப்பற்றினன். ஆனால் அவ்விடங்களில் சோழர் ஆக்ஷி எப்படி குன்றிற்று என்பது புலப்படவில்லை.

பாண்டியரைப்போலவே சேரரும் அடிக்கடி சோழருடன் சண்டைகள் செய்தனர். கரிகாலச்சோழனும் அவன் குமாரன் நலன்கிள்ளியும் அவரை அடிக்கடி எதிர்த்து தோற்கடித்தனர். ராஜராஜன் I (907-935) சேர நாட்டுத் துறைமுகமொன்றைப் பிடித்தழித்தான். ராஜாதிராஜன் I (967-975)-ம் வீரராஜேந்திர (987-990)-னும் அவருடன் யுத்தம் பண்ணி வெற்றி பெற்றார்கள். குலோத்துங்கன் I (993-1040) சேரர் கலகத்தையடக்கி அவர் ஊர் ஓரம் கோட்டாற்றில் ஒரு ஸைன்யத்தையும் ஸ்தாபித்தான். 13-ம் நூற்றாண்டில் (1235) ரவிவர்மச்சேரன் ஸ்ரீரங்கத்திற்கும் காஞ்சீபுரத்திற்கும் சென்றான்.

## 8-ம் அதிகாரம்.

### மஹமதியர் படையெடுப்பு.

13-ம் நூற்றுண்டில் (1232) டெல்லி மஹமதிய சக்ரவர்த்தியின் ஸேனைத்தலைவருள் ஒருவன் மாலிக்காபூர் என்பான் தென்னுட்டின்மேல் படையெடுத்து ஹாய்ஸால ராஜ்யத்தை யழித்தான். அவன் ராமேசுவரம்வரை செல்லவில்லையானுலும் 1249 முதல் 1287 வரை மஹமதிய அதிகாரிகள் திருச்சினுப்பள்ளி மதுரை ஜில்லாக்களில் இருந்தனரென நிச்சயிக்கலாம். இக்காலத்தில்தான் (1235) ரவிவர்மச்சேரன் ஸ்ரீரங்கத்திற்கும் காஞ்சீபுரத்திற்கும் சென்றுன். சோழபாண்டியர் அழிந்துபோகவில்லையென்றுலும் அவரைப்பற்றியொன்றும் தெரியவில்லையாதலால் அவர் ஸ்வாதந்திரியத்தை இழந்துவிட்டாரென்று தோன்றுகிறது.

தக்ஷிணத்தில் ஏற்பட்ட மஹமதிய ராஜ்யங்களுள் முதன்மையாயிருந்தது கோல்கொண்டா. இந்த ராஜ்யத்தில் பத்திரகிரி மலையில் புராதனமாய் ஏற்பட்ட ஸ்ரீராமர் ஆலயம் ஒன்று உண்டு. பத்திரகிரியில் கோபன்ன என்ெருரு ராமபக்தரிருந்தார். இவர் தினந்தோறும் ஏழைகளுக்கு அன்னதானம் செய்வது வழக்கம். இவரது தர்மத்தின் பலனுக இறந்துபோன இவருடைய 5 வயது குழந்தை உயிர்த்தெழுந்தது. கோல்கொண்டாவின் மஹமதிய அதிகாரி கோபன்னவிடம் ப்ரீதிகொண்டு அவரைப் பத்ராசலம் தாசீல்தாராக நியமித்தான். ஸர்க்கார் கிஸ்தி 6 லக்ஷம் ரூபாய் வரையில் பாக்கி வசூலாகவேண்டியிருந்தது. பணத்தை பாக்கியில்லாமல் வசூல் செய்து அதைக்கொண்டு இடிந்து கிடந்த ஸ்ரீராமர் ஆலயத்தை கோபன்ன புதுப்பித்தார். அதிகாரி தன் பணத்திற்காக கோபன்னவைச் சிறையிலிட்டான். அன்று இரவே ஸ்ரீராமர்

அவனிடம் கோபன்ன வேஷத்துடன் சென்று பணத்தைப் பூரும் செலுத்தி அவனுக்கு பொற்பாத தரிசனமளித்து சிறையிலுறங்கிக்கொண்டிருந்த கோபன்னவின் தலைமாட்டில் ரசீதை வைத்துவிட்டு மறைந்தார். மறுநாள் காலையில் அதிகாரி கோபன்னவிடம் நேரில் வந்து பொற்பாதத்தின் ரஹஸ்யத்தை வினவ கோபன்ன அவனை மலைக்கழைத்துச் சென்றார். தன் ஸன்னிதானத்திற்கு வந்த மஹமதியனுக்கு ஸ்ரீராமர் தரிசனம் கொடுத்தார். இந்த மாதிரியாக சிற்சில மஹமதியர்களுக்கு ஹிந்து மதத்தில் விசுவாஸமுண்டாகி மஹமதியர்களுள் ஹிந்து மதம் பரவ ஆரம்பித்தது. ஹிந்துக்களும் மஹமதியராவதை நிறுத்தினர். இப்படி ஹிந்துவான மஹமதியருள் ஒருவர் கபீர்தாஸர். இது நிற்க, கோபன்னவை மறுபடியும் தாசில் வேலை பார்க்க மஹமதிய அதிகாரி உத்தரவு கொடுத்தான். ஒரு நாள் அரண்மனையில் உலாவிக்கொண்டிருந்தபோது ஸ்ரீரங்கம் ரங்கனதர் ஆலயத்திலிருந்த ஸ்ரீராமரின் பொன் விக்ரஹத்தை வைத்துக்கொண்டு அவன் குமாரி விளையாடினதைப் பார்த்த கோபன்ன 'அது ஏது' என வினவ, 'ஸ்ரீரங்கத்திலிருந்து மாலிக்காபூரினல் அது கொண்டுவரப்பட்டது' என்றறிந்து, அவ்விக்ரஹத்தைத் தந்திரமாய்க் கைப்பற்றி அதை ஸ்ரீரங்கத்தில் மறுபடியும் பிரதிஷ்டை செய்து அவ்விருத்தாந்தத்தையும் மதில் சுவர்களில் எழுதி வைத்தார்.

---

## 9-ம் அதிகாரம்.

### விஜயநகர ஸமஸ்தானம்.

1232-ல் மாலிக்காபூரினல் ஹாய்ஸால ராஜ்யம் அழிக்கப்பட்ட பின்பு, துங்கபத்திரா நதிக்கரையில் ஹம்பி பிர

தேசத்தில் விஜயநகர ஸமஸ்தானம் ஸ்தாபிக்கப்பட்டது. வடக்கே துங்கபத்திரா கிருஷ்ணுவிலிருந்து தெற்கே கன்யா குமாரிவரையில் அதன் அதிகாரம் ஏற்பட்டதால் சோழ பாண்டிய நாடுகளும் இச்சமஸ்தானத்தின் பாகங்களாய் விட்டன. விஜயநகர அரசர்களான ஹரிஹரன் I-ம் புக்காவும் 1258-முதல் 1298-வரையில் ஆண்டார்கள். தெற்கே மஹமதியர் படையெடுக்காதபடி இவர்கள் தடுத்தனர். வடமொழியில் பல கிரந்தங்கள் இயற்றிய மாதவாசார்யரும் சாயணுசார்யரும் விஜயநகர ஸமஸ்தானத்தில் மந்திரிகளாயிருந்தவர்கள். 1365-ல் அச்சமஸ்தானத்தின் ராஜதானிக்கு பெர்ஸியாவின் ராஜதூதன் ஒருவன் வந்தான். விஜயநகரத்தினுடைய மஹிமையைப்பற்றி அவனும் போர்ச்சுகீஸ் பிரயாணிகளும் எழுதியிருக்கிருர்கள். விஜயநகரத்தாரின் சிலாசாஸனங்கள் ஸ்ரீரங்கம், திருவானைக்காவல், ரத்தின கிரீசுவர மலை, அம்பில், திருப்பளாத்துறை, திருச்சி, இவ்வூர்களில் கிடைத்திருக்கின்றன.

மாலிக்காபூர் மதுரையிலும் திருச்சிணுப்பள்ளியிலும் மஹமதிய கவர்னர்களை ஏற்படுத்தியிருந்தான். அவர்கள் 1249 முதல் 1287 வரையில் ஆட்சி செலுத்தி வந்தனர். பிறகு விஜயநகரம் ஓங்கிற்று. ஸ்ரீரங்கத்திலிருந்து கொண்டு போகப்பட்ட ஸ்ரீராமர் விக்கிரஹம் 1293-ல் மறுபடியும் பிரதிஷ்டை செய்யப்பட்ட விஷயம் ஏற்கனவே சொல்லப்பட்டது. விஜயநகர ராஜவம்சத்தில் பிறந்த கம்பண்ண உடையான், விரூபாக்ஷன் முதலியவர் தம் ஸ்வாதீனத்தைத் திருச்சிணுப்பள்ளி, தென் ஆற்காடு, மதுரைப் பிரதேசங்களில் ஏற்படுத்திஞர்கள். கம்பண்ண உடையானின் சிலா சாஸனங்கள் திருப்பளாத்துறையில் கிடைத்திருக்கின்றன. ஹரிஹரன் II (1301-1328)-இன் சாஸனங்கள் திருச்சியிலேயே கிடைத்திருக்கின்றன.

கிருஷ்ணராஜ(ய)தேவன் (1431-1451) :—இவன் மத வைராக்கியத்துக்கும் ஜனசுச்ரூஷைக்கும் பேர்போன தர்மப் பிரபுவாய் விளங்கினுன். இவன்தான் ஸ்ரீரங்கத்தில் வெளிப்பிராகாரத்தையும் ராஜ(ய)கோபுரத்தையும் கட்டினுன். கோபுரத்தின் நீளம் 130 அடி, அகலம் 100 அடி, உயரம் 43 அடி ; வாசல் கதவு நிலையின் உயரம் 23 அடி. இது கட்டி முடியுமுன் மஹமதியருடன் சண்டையுண்டாய் விட்டது. ஆதலால் கோபுரம் முடிவுபெறவில்லை. இவன் மந்திரி சேஷராஜ(ய)ன் ஸ்ரீரங்கத்தில் ஆயிரக்கால் மண்டபத்துக்கெதிரில் ஒரு மண்டபம் கட்டினுன். அது இப்பொழுதும் சேஷராஜ(ய)ன் மண்டபம் எனப் பெயர் பூண்டிருக்கிறது. கிருஷ்ணராஜ(ய)தேவனின் சாஸனங்கள் திருப்பளாத்துறையில் கிடைத்திருக்கின்றன.

அச்யுதராஜ(ய)தேவன் (1452-1464) :—இவன் ஆண்ட காலத்தில் திருவாங்கூர் அரசன் பாண்டியநாட்டை ஜயித்து விஜயநகரத்தாருடன் சண்டைக்கு வந்தான். ஆனுல் அவன் தோற்கடிக்கப்பட்டு தாம்பிரபர்ணி வரையில் துரத்தப்பட்டான். அந்நதிமத்தியில் ஜய ஸ்தம்பத்தை நாட்டிவிட்டுத் திருவாங்கூர் அரசனிடம் கப்பம்பெற்றுத் திரும்புகையில் அச்யுதராஜ(ய) தேவன் பாண்டிய அரசன் குமாரியை மணம்புரிந்தான்.

1480-ல் உறையூரிலிருந்து சோழ வம்சத்தானெருவன் பாண்டியனுடன் யுத்தம் செய்து அவன் ஊரைப்பிடுங்கிக்கொண்டான். பாண்டியன் விஜயநகரத்தாரை உதவி கேட்க நாகம்மா நாயக்கன் தெற்கே வந்து சோழனைவென்று பாண்டியனுக்கு உதவிசெய்வதற்குப் பதிலாகத் தானே மதுரையில் அரசு செலுத்த ஆரம்பித்தான். நாகம்மாவின் தலையைக் கொண்டுவர விஜயநகரத்திலிருந்து அவன் குமாரன் விசுவனுத நாயக்கன் அனுப்பப்பட்டான். தகப்பனும்

குமாரனும் சேர்ந்து யோஜனைசெய்து நாகம்மா மன்னிப்புக் கேட்க அவனே தென்னாட்டி னதிகாரத்தைப் பெற்றான். காலக்கிரமத்தில் அவன் சந்ததியார் கப்பம்கட்டுவதை நிறுத்தி தாமே அரசர் பதவியை பேர் நீங்கலாக அடைந்தனர். நாயக்கர் ஆளுகையில் சோழ பாண்டியர் என்ன நிலைமையிலிருந்தார் என்று சொல்லமுடியாது. அவர்களைப்பற்றி சரித்திர ஆராய்ச்சியில் ஒரு சமாசாரமும் கிடைக்கவில்லை.

ராமராஜ(ய)தேவன் :—இவன் 1487-ல் ஹம்பி பிரதேசத்தில் நடந்த யுத்தத்தில் மஹமதியரால் தோற்கடிக்கப்பட்டு உயிர் துறந்தான். ராஜதானியும் பாழாக்கப்பட்டது. பிறகு ஆண்ட அரசர்கள் பெனுகொண்டாவிலிருந்தும், அதற்குப்பிறகு சந்திரகிரியிலிருந்தும் அரசு செலுத்திவந்தார்கள். சந்திரகிரியரசன் ஒருவன் 1562-ல் இங்கிலீஷ் கம்பெனிக்கு மைலாப்பூருக்கு வடக்கேயுள்ள பூமியை விற்றான். அங்கேதான் ஸெண்ட் ஜார்ஜ் கோட்டை கட்டப்பட்டது. அவனால் எழுதிக்கொடுக்கப்பட்ட ஸ்வர்ணத்தகட்டு கிரயசாஸனப்பத்திரமும் அங்கேயே இருந்தது. 1668 முதல் 1671 வரையில் பிரஞ்சார் சென்னையைத் தம் ஸ்வாதீனமாக்கினர். அக்காலத்திற்குப் பிறகு அவ்விடம் ஸ்வர்ணத்தகடு காணப்படவில்லை.

---

## 10-ம் அதிகாரம்.

### நாயக்கர்.

விசுவனாத நாயக்கன் (1481-1485) :—இவன் ஆக்ஷி திருச்சினாப்பள்ளி, மதுரை, திருநெல்வேலி, கோயம்புத்தூர் முதலிய ஜில்லாக்களில் ஏற்பட்டது. தஞ்சாவூர் நாயக்கனுக்கு வல்லத்தைக் கொடுத்து அதற்குப்பதிலாய் ஸ்ரீரங்கத்தைப் பரிவர்த்தனைசெய்து கொண்டான். திருச்சியில் கோ

ட்டைச்சுவர்களை பலப்படுத்தி மலைக்கோட்டைத்தெருவை கட்டி தெப்பக்குளத்தையும் வெட்டினன். கோட்டையைச் சுற்றி இரட்டை மதில் சுவர்கள் கட்டி அகிழ்களை வெட்டி அவ்வகிழ்களுக்கு காவேரியிலிருந்து ஜலம் வரும்படி ஏற்பாடு செய்தான். கோட்டைக்கு நாற்புரங்களிலும் கோபுரங்கள் கட்டி வாசல்கள் ஏற்படுத்தினன். இப்பொழுது இருக்கும் மெய்ன் கார்டு கேட் தான் மேலவாசல். * இவன் ஸ்ரீரங்கம் கோவிலிற்கு விசேஷ திருப்பணிகளும் செய்தான். திருட்டு முதலிய குற்றங்களைத் தடுக்கும்பொருட்டு சிலரை பாளையக்காரராய் அமர்த்தி அவருக்கு நிலம் கொடுத்து யுத்தகாலங்களில் அவர் தனக்கு உதவிசெய்யும்படி ஏற்பாடு செய்தான். திருச்சியில் தாலூகா கச்சேரி இருக்குமிடத்தில்தான் இவன் அரண்மனையிருந்தது. சர்க்கார் பாளையம் இவனுடைய பாளையம்.

குமார கிருஷ்ணப்பன் (1486-1495) :—இவன் விசுவநாதன் குமாரன். இவன் லங்கையை ஜயித்தான். 1524 வரையில் ஆண்ட இவன் சந்ததியாரைப்பற்றி ஒன்றும் தெரியவில்லை.

முத்துகிருஷ்ணப்பன் (1524-1531) :—சேதுபந்த ராமேசுவரத்திற்குப் போய்வரும் யாத்திரிகரின் ரக்ஷணார்த்தம் ராமநாதபுரத்தில் சேதுபதி வம்சத்தை இவன் ஸ்தாபித்தான்.

முத்துவீரப்பன் (1532-1545) :—

திருமலைநாயக்கன் (1546-1581) :— விஜயநகரத்தில் 1487-ல் நடந்த சண்டையில் விஜயநகர அரசன் தோற்கடிக்கப்பட்டு ராஜதானியும் வேறு இடத்துக்கு மாற்றப்

* கோட்டை ரெயில் ஸ்டேஷனுக்கும் மேலவாசல் என்ற பெயர் சிலர் கொடுத்திருக்கின்றனர். மெய்ன் கார்டு கேட்டுக்கு சமீபத்தில் அது ஏற்பட்டதுதான் அப்பெயருக்குக் காரணம்.

பட்டதால் இவன் கப்பங் கட்டுவதை நிறுத்திவிட்டான். 1562-ல் சந்திரகிரியரசன் ரங்கராஜ(ய) தேவன் தென்னாட்டிற்கு வந்தான். திருமலையின் தூண்டுதலின்பேரில் கோல்கொண்டா ஸுல்டான் சந்திரகிரியை தாக்கவே அவன் திரும்பிவிட்டான். மஹமதியர் அவனைத் தோற்கடித்துவிட்டு 1566-ல் தெற்கே வந்து ஜிஞ்ஜிக்கோட்டையை முற்றுகை போட்டனர். பீஜப்பூர் ஸுல்டானிடமிருந்து திருமலையின் உதவிக்காக வந்த மஹமதிய போர்வீரர் தம்மினத்தாருடன் சேர்ந்துகொண்டு திருமலையை மதுரைக்கு விரட்டியடித்தார். பிறகு மஹமதியர் தஞ்சாவூருக்குச் சென்று அந்த நாயக்கனிடமிருந்தும் திருமலையினிடமிருந்தும் கப்பம் பெற்று வடக்கே திரும்பினர்.

தனக்கு விரோதமாய் சந்திரகிரியரசனுக்கு மைசூர் மன்னன் உதவிசெய்ததற்காக திருமலை மஹமதியரின் உதவியைக்கொண்டு மைசூரைத்தாக்கினான். நடந்த யுத்தத்தில் மைசூரார் அடக்கப்பட்டனர். விஜயநகர ராஜவம்சமும் இருந்தவிடம் தெரியாமல் போயிற்று. திரும்பவும் மஹமதியருக்கு திருமலையும் தஞ்சாவூர் நாயக்கனும் ஏராளமாய்ப் பொருள் தானம் செய்தனர்.

திருமலையின்மேல் கோபங்கொண்ட மைசூரரசன் கோயம்புத்தூரைப் பிடித்துக்கொண்டு மதுரையைத் தாக்கினான். மைசூரார் தோற்கடிக்கப்பட்டு விரட்டப்பட்டார். திருமலையின் சகோதரன் மைசூர் நாட்டினுட்சென்று அரசனைப் பிடித்து அவன் மூக்கையறுத்து அதை மதுரைக்கனுப்பினான்.

1581-ல் திருமலையிறந்தபோது அவன் அதிகாரத்தின் கீழ் திருச்சினாப்பள்ளி, மதுரை, ராமநாதபுரம், திருநெல்வேலி, கோயம்புத்தூர், சேலம், புதுக்கோட்டை, திருவாங்கூர் முதலியவையிருந்தன. அவன் ராஜதானி மதுரை;

திருச்சியிலும் வசித்தான். மதுரையில் பெரிய மால் ஒன்றைக்கட்டினுன். இப்பொழுதும் 'திருமலை நாயக்கன் மால்' என்ற பிறஸித்தியுண்டு.

முத்துஅளகாத்திரி (1582-1584):—மஹமதியருடன் முரண் செய்ததில் முத்து அளகாத்திரி காட்டிற்குள் விரட்டியடிக்கப்பட்டான். தஞ்சாவூர், வல்லம், இவைகளையும் மஹமதியர் கைப்பற்றினர். முத்துஅளகாத்திரி பயந்து, திரவியத்தைக்கொடுத்து, அவர் தயவை மறுபடியும் அடைந்தான்.

சோக்கனுதன் (1585-1604):—தஞ்சாவூர் நாயக்கன் தூண்டுதலின் பேரில் திருச்சினுப்பள்ளிக்கு மஹமதியர் இரண்டு தடவை வந்தனர். முதல் தடவை தோற்கடிக்கப் பட்டபோதிலும் இரண்டாந்தடவையில் அவர் சொக்கனுதனிடம் கப்பம் பெற்றுச் சென்றுர்.

தஞ்சாவூர் நாயக்கனின் குமாரியைக் கலியாணம்செய்ய நினைத்த சொக்கனுதன் தன் எண்ணம் நிறைவேறுமல் தஞ்சைக் கோட்டையைத் தாக்கினுன். தன் குமாரியையும் அரண்மனையிலுள்ள மற்ற ஸ்திரீகளையும் ஓர் அறையிலிருக்கச்செய்து, வெடி மருந்தால் அதைத் தகர்த்திவிட்டு, யுத்தத்திற்குச்சென்ற தஞ்சை நாயக்கன் தோற்கடிக்கப்பட்டு தலையையிழந்தான். சொக்கனுதன் சகோதரன் அளகிரி தஞ்சாவூரில் ஸ்தாபிக்கப்பட்டான். ஆனுல் அவன் கொஞ்சகாலத்தில் ஸ்வதந்திரனுனுன்.

இறந்துபோன தஞ்சாயூர் நாயக்கனின் சந்ததியாருள் ஒருவன் பீஜப்பூர் ஸுல்டானிடம் உதவிகேட்க 1596-ல் மஹாராஷ்ட்ர வெங்காஜி (சீவாஜி சத்ரபதியின் சகோதரன்) ஒரு பெரும் சேனையுடன் அனுப்பப்பட்டான். அளகிரியைத் தோற்கடித்துவிட்டு வெங்காஜி தானே ராஜ்யத்தை வைத்துக்கொண்டான்.

இந்த சமயத்தில் மைசூர் சிக்க தேவராஜ உடையான் கோயம்புத்தூரைப் பிடித்துக்கொண்டான். சொக்கனுதன் ஒன்றும் செய்யமுடியவில்லை. அவன் மந்திரிகள் அவனைத் துலைத்துவிட்டு அவன் சகோதரனை அவன் ஸ்தானத்தில் வைத்தார்கள். 1600-ல் மஹாமதியர் உதவியைக்கொண்டு சொக்கனுதன் தன் சிம்ஹாஸனத்தை மீட்டான். 1604-ல் மைசூரார் திரும்பவும் திருச்சிக்கு வந்தார்கள். மஹாராஷ்டிரர் மைசூரரைத் தோற்கடித்து திருச்சியை வளைத்துக் கொண்டார். துக்கத்தால் சொக்கனுதனுமிறந்தான்.

ரங்க கிருஷ்ணமுத்துவீரப்பன் (1605-1611):—நாயக்கர் ராஜ்யத்தின் விஸ்தீர்ணம் குறைந்து போய்விட்டது. மைசூராரும் மஹாராஷ்ட்ரரும் கொள்ளை கொண்டது போக மீதிதான் இவனுக்குக் கிடைத்தது. 1607-ல் தன் ராஜதானியையும் ராஜ்யத்தில் ஒருபான்மையையும் திரும்ப அடைந்தான். இந்த சமயத்தில் தென்னுட்டிற்கே ஒரு புதுச் சத்துருவேற்பட்டான். 1607-முதல் தான் இறந்த 1629 வரை டெல்லி சக்ரவர்த்தி அவுரங்கஸீப் தக்ஷிணத்திலேயே தங்கினுன்.

மங்கம்மாள் (1612-1626):—அவன் குமாரன் பால்யமாயிருந்தபடியால் அவனன்னை மங்கம்மாள் ஆக்ஷிபுரிந்தாள். இவள் அநேக கோவில் திருப்பணிகள் செய்தாள். நிழல்தரும் விருக்ஷங்களை ரஸ்தாக்களின் இருபுரமும் நட்டாள். ஸ்ரீரங்கத்தில் அம்மாமண்டபத்தைக் கட்டினுள். திருச்சியில் டவுன்ஹாலென விளங்கும் கொலுமண்டபத்தைக் கட்டி அதிலிருந்து நகர பரிபாலனம் செய்தாள். மணப்பாரையில் ஒரு முசாபுரி பங்களாவைக் கட்டினுள். உய்யக்கொண்டானின் இடிந்துபோன பாலத்தைப் புதுப்பித்தாள்.

புத்தூரிலிருந்து அரைமைல் மேற்கே உய்யக்கொண்டான் சில பாறைகளின் மேல் ஓடுகிறது. அதுவே திருச்

சியில் உய்யக்கொண்டான் ஓடும் மேட்டுப் பிரதேசம். காவேரி வெள்ளம் உய்யக்கொண்டானில் தாக்கினல் ஊருக்கே அனர்த்தம் விளையுமென்று கண்டு அப்பாறைகளின் மேல் அதிக ஜலம் தானே வழிந்து ஓடி குடமுருட்டி வழியாய்க் காவேரியிலேயே விழும்படி ஏற்பட்டுள்ள அணையை மங்கம்மாள்தான் கட்டினது. சத்துருக்கள் குடிதண்ணீரில் விஷம் கலக்காமல் பாதுகாக்க உய்யக்கொண்டான் திருமலையிலும் ரத்தினகிரீசுவர மலையிலும் சிறு காவல் ஸேனைகளை (out-post) ஸ்தாபித்தாள். உய்யக்கொண்டானிலிருந்து ஊரிலுள்ள 64 குளங்களுக்கும் பூமிக்கடிவழியே ஜலம் செல்லும்படி ஏற்பாடும் செய்தாள்.

1615-ல் அவுரங்கஸீப்பின் ஸேனைத்தலைவன் ஒருவன் ஸுல்பிகர்கான் என்பான் திருச்சி தஞ்சைக்குவந்து கப்பம் பெற்றுச் சென்றான். 1617-ல் மைசூரார் திருச்சியைத் தாக்கினர்; வடக்கேயிருந்து மஹமதியர் மைசூர்மேல் படையெடுக்க ஊருக்குத் திரும்பிவிட்டனர்.

விஜயரங்கசோக்கநாதன் (1627-1653):—மங்கம்மாளின் பௌத்ரன் விஜயரங்கசொக்கனாதன் பட்டத்துக்கு வந்த பிறகு ஸ்ரீரங்கம் கோவிலுக்கு அநேக திருப்பணிகள் செய்தான். அவைகளில் இருபதினாயிரம் ரூபாய் பொறுமான தங்கக்குடம் ஒன்று. இவனுடையவும் இவன் குடும்பத்தாருடையவும் தந்தபிரதிமைகள் ஸ்ரீரங்கம் கோவிலில் வைக்கப்பட்டிருக்கின்றன.

மீனாக்ஷி (1654-1658):—விஜயரங்கசொக்கனாதனுக்குக் குமாரனில்லை. அவன் மனைவி மீனாக்ஷி வங்காருதிருமலையின் குமாரனை ஸ்வீகாரம் எடுத்துக்கொண்டாள். 1656-ல் வங்காரு தனக்கு ராஜப்ரதிநிதித்வம் வேண்டுமென்று கலகம் செய்தான். அதே சமயத்தில் ஆர்க்காட்டி

விருந்து ஸப்தார் அலி கானும் சண்டா சாஹிப்பும் பெரும் படையுடன் தெற்கே வந்தனர்.*

மஹமதியர் தஞ்சாவூர் மார்க்கமாய் மதுரை திருநெல்வேலிக்குச் சென்றுத் திரும்புகாலில் மீனாக்ஷிக்கும் வங்காரு திருமலைக்கும் மத்தியஸ்தம் செய்வதாய் ஒப்புக்கொண்டனர். வங்காருவினிடம் 30 லக்ஷம் ரூபாய்க்குச் சீட்டுப் பெற்றான் ஸப்தார் அலி கான். சண்டாசாஹிப்போ மீனாக்ஷியிடம் கோடி ரூபாய்க்குச் சீட்டு வாங்கிக்கொண்டு, செங்கல்லைப் பட்டினால் போற்றி, அதையே கொரான் என்று சொல்லி, அவளைக் காப்பாற்றுவதாய் அதன்மேல் ஆணையிட்டான். ஆனாலிருவரும் ஒரு காரியமும் செய்யாமல் ஆர்க்காட்டுக்குச் சென்றுவிட்டனர். மீனாக்ஷியும் வங்காருவும் தம் சண்டையைத்தாமே தீர்த்துக்கொண்டனர். மதுரையும் திருநெல்வேலியும் வங்காரு வீதத்துக்குக் கிடைத்தன.

1658-ல் சண்டாசாஹிப் திரும்பவும் திருச்சிக்கு வந்து மீனாக்ஷியை கைதியாக்கி அவளை மானபங்கப்படுத்த யத்தனித்ததில் அவள் விஷம் உண்டு உயிர் துறந்தாள். அவளுடன் நாயக்கர் வம்ச ஆளுகையும் முடிவு பெற்றது. வங்காருவைத் தோற்கடித்துவிட்டு, சண்டாசாஹிப், மைசூராருக்குச் சொந்தமான கரூரைப் பிடித்துக்கொண்டு, திருச்சியில் அதிகாரம் செலுத்த ஆரம்பித்தான்.

---

* 1615-ல் மங்கம்மாளிடம் ஸுல்பிகர்கான் கப்பம் பெற்றுப் போன பிறகு கொள்ளிடத்திற்கு வடக்கேயுள்ள கர்னாடகம் (1620-லிருந்து) மஹமதிய நவாபால் ஆளப்பட்டது. டெல்லி சக்ரவர்த்திக்குக்கீழ் அதிகாரம் செலுத்தினவன் தக்ஷிண ராஜப்ரதிநிதியாகிய நிஜாம் ஆனான்.

## நாயக்கர் வம்சாவளி.

நாகம்மா நாயக்கன்

|

விசுவநாத நாயக்கன்
(1481-1485)

|

குமாரகிருஷ்ணப்பன்
(1486-1495)

|

முத்துக்கிருஷ்ணப்பன்
(1524-1531)

|

முத்துவீரப்பன்
(1532-1545)

|

திருமலைநாயக்கன்
(1546-1581)

|

முத்து அளகாத்திரி
(1582-1584)

|

சொக்கனுதன் = மங்கம்மாள்
(1585-1604) (1612-1626)

|

ரங்ககிருஷ்ண முத்துவீரப்பன்
(1605-1611)

|

விஜயரங்க சொக்கனுதன் = மீனுக்ஷி
(1627-1653) (1654-1658)

|

ஸ்வீகார குமாரன்
(வங்காரு திருமலையின் ஜனக குமாரன்)

## 11-ம் அதிகாரம்.

### மஹமதியர் ஆக்ஷி.

1662-ல் வங்காரு திருமலையினாலும் தஞ்சாவூரரசனாலும் தூண்டப்பட்ட மஹாராஷ்ட்ரர்கள் ஸடாராவிலிருந்து ஆர்க்காட்டுக்கு வந்து நவாப்புடன் சண்டை செய்து அவனைக் கொன்றார்கள். நவாப்பின் குமாரன் மேலே சொன்ன ஸப்தார் அலி கான் அவர்களுக்கிணங்கிவர அவனிடம் கப்பம் பெற்றுச் சென்ற மஹாராஷ்ட்ரர் அவனுடைய வேண்டுகோளின்பேரில் திரும்பி வந்து திருச்சினாப்பள்ளியை வளைத்துக்கொண்டனர். சண்டா சாஹிப் தோற்கடிக்கப்பட்டு ஸடாராவிற்குக் கைதியாய்க் கொண்டுபோகப் பட்டான். திருச்சினாப்பள்ளிக்கு முராஹரிராவ், கவர்னராய் நியமிக்கப்பட்டு, வந்தான்.

1665-ல் நிஜாம் தெற்கே வந்து ஸப்தார் அலி கானை நீக்கி 1666-ல் ஆன்வாருட்டீனை நவாபாக நியமித்தான்.

1670-ல் நிஜாமிறந்ததால் அவன் குமாரன் நாஸர் ஜங்கும் பேரன் முஸபர் ஜங்கும் ஸிம்ஹாஸனத்திற்காக அடித்துக் கொண்டனர். அதே வருஷத்தில் ஸாஹு ஸடாராவில் இறந்ததால் சண்டா சாஹிப் சிறையினின்றுந் தப்பியோடி வந்தான். அவன் முஸபர் ஜங்குடன் சேர்ந்து ஆன்வாருட்டீனை ஆம்பூரில் நடந்த சண்டையில் கொன்று தன்னையே நவாப்பாக்கிக் கொண்டான். ஆன்வாருட்டீன் குமாரன் மஹமடாலி திருச்சினாப்பள்ளிக்கு ஓடி வந்து தன்னையே நவாப்பென்று சொல்லிக்கொண்டான்.

திருச்சினாப்பள்ளியில் மஹமதியர் ஸ்வல்பகாலம் ஆக்ஷிபுரிந்ததில் தாங்கள் ஹிந்துக்களுக்கு மதவிரோதியர் என்பதைக் காட்டினர். ஹிந்துக்களை ரொம்பவும் கஷ்டப்

படுத்தி மானபங்கமும் செய்தார்கள். ஹிந்துக்களின் கோவில்களில் பலவற்றைத் தம் வசமாக்கி அவைகளைப் பள்ளிவாசல்களாக மாற்றினார்கள். ஓர் உதாரணமாய் நத்தர்ஷா பள்ளிவாசலைச் சொல்லலாம். அது பூர்வகாலத்தில் மாத்ருபூதர் கோவில். திரிசிரஸ்ஸினால் மலைமேல் ஆலயம் கட்டப்படுமுன் ஸ்வாமி கீழே இருந்தார். அவருக்கு மலைமேல் அவனால் இரண்டாவது ஆலயம் ஏற்படுத்தப்பட்டது. மஹமதியர் அக்கோவிலைப் பள்ளிவாசலாக்கி ஸ்வாமியின்மேல் விளக்கை இப்போதும் ஏற்றி வருகிறார்கள். சிலவருஷங்களுக்குமுன் இடிந்துபோன காம்பவுண்ட் சுவற்றைக்கட்ட அஸ்திவாரம் பரித்ததில் மண்வெட்டியினலடிபட்டுத் தலையுடைந்த நந்தியொன்று அகப்பட்டது. ஒரு தூணில் நண்டு ஒன்று ஸ்வாமிக்குப் பூஜைசெய்யும் ஐதீகம் காணப்படுகிறது. கோவிலின் கோபுரம் ஸஹஸ்ரபணு பணியினால் தாங்கப்படும்போல் கட்டப்பட்டிருக்கிறது.

---

## 12-ம் அதிகாரம்.

### ஆங்கிலோ பிரஞ்சு கர்னாடக முதல் யுத்தம்.

கொஞ்சகாலமாய் ஒருவருக்கொருவர் சண்டைசெய்து கொண்டிருந்து தற்சமயம் சமாதானமாயிருந்த ஆங்கிலரிடமும் பிரஞ்சாரிடமும் அவரவருக்கு வேண்டிய அளவுக்கு மேற்பட்ட போர்வீரர்கள் இருந்தனர். ஆகையால் கர்னாடகச் சண்டையில் அவர்கள் தலையிட்டுக்கொண்டார்கள். ஆங்கிலர் மஹமடாலி பக்கமும் பிரஞ்சார் சண்டாசாஹிப் பக்கமும் சேர்ந்தனர். பின் நடந்த சண்டை- கர்னாடக நவாப் ஸ்தானத்திற்காக மஹமதியருள் சண்டையாயிராமல் தென்னிந்தியாவின் ஆதிபத்யத்திற்காக ஆங்கிலோ பிரஞ்சு சண்டையாகவேயிருந்தது.

தஞ்சாவூர் மன்னனும் புதுக்கோட்டை தொண்டமானும் மஹமடாலி கக்ஷியில் சேர்ந்தார்கள். தஞ்சாவூரைக் கொள்ளையடிக்க நினைத்துச் சென்ற சண்டாசாஹிப் மஹாராஷ்ட்ரராலும் மைசூராராலும் மேஜர் லாரன்ஸாலும் உதவி செய்யப்பட்ட நாஸர் ஜங்கின் வருகையைக் கேள்விப்பட்டு புதுச்சேரிக்கு ஓடிவிட்டான். முஸபர் ஜங்கை அவன் சிறிய தகப்பன் சிறையிலடைத்தான். ஆனாலவனே கொலை செய்யப்பட்டமையால் முஸபர்ஜங் விடுதலையடைந்து நிஜாமானுன்.

இங்கிலீஷார் மஹமடாலிக்கு உதவிசெய்யும் பொருட்டு ஸெண்ட் டேவிட் கோட்டையிலிருந்து காப்டன் கோப்பை அனுப்பினார்கள். மதுரையில் நிகழ்ந்த ஒரு கலகத்தையடக்க அவன் சென்ருன். புதுச்சேரியிலிருந்து சண்டாசாஹிப் தெற்கே வர யத்தனித்தபடியால் காப்டன் ஜின்ஜென் ஒரு பெரிய படையுடன்வந்து வாலிக்கொண்டாபுரத்தில் ஒரு தோப்பில் தங்கினுன். சண்டாசாஹிப் 4 மைலுக்கப்பாலிருந்து சண்டைசெய்து ஆங்கிலரைத் தோற்கடித்து ஊட்டத்தூருக்கு ஓட்டிவிட்டான். அப்படி ஓடின ஆங்கிலருள் ஒருவன் லெப்டினண்ட் க்ளைவ் (1672.)

பிரஞ்சாரும் சண்டாசாஹிப்பும் இங்கிலீஷாரைத் துரத்திவந்து மறுபடியும் தோற்கடித்தனர். ஆங்கிலர் பிக்ஷாண்டார் கோவில் வழியாய் ஸ்ரீரங்கம் கோவிலுக்கு வந்து, பிறகு திருச்சியை யடைந்தார்கள். அவர்களைத் துரத்திவந்த சண்டாசாஹிப்பும் பிரஞ்சாரும் ஸ்ரீரங்கத்தில் ஒரு ஸேனையை வைத்துவிட்டு காவேரியைத்தாண்டி திருச்சினுப்பள்ளிக்குக் கிழக்கே தங்கினர்கள். அவர் வரிசை ஸர்க்கார் பாளையத்திலிருந்து பிரஞ்சு பாறைவரையிலும் அங்கிருந்து எறும்பேசுவரம் வரையிலும் நின்றது. வேருெரு ஸேனையுடன் வந்த மேஜர் லாரன்ஸ் எறும்பே

சுவரத்திற்குத் தெற்கேசென்று பொன்மலை மார்க்கமாய் திருச்சிக்குள் வர முயன்றான். மைசூராரும் நவாப்பின் சேனைகளும் காப்டன் டால்டனும் அவனுடன் சேர்ந்தார்கள். பிரஞ்சார் தோற்கடிக்கப்பட்டுக் காவேரிக்கு வடக்கே துரத்தப்பட்டனர். ஆனால் லாரென்ஸ் அவரைப் பின் தொடரவில்லை.

இதற்குள் ஆர்க்காட்டை க்ளைவ் பிடித்துக்கொண்டு 50 நாள் முற்றுகையிலும் வெற்றியடைந்தான். திருச்சியைவிட்டு சண்டா சாஹிப் சேனையும் வடக்கே துரத்தப் பட்டமையால் க்ளைவ் தெற்கே வந்தான். வரும்வழியில் சமயபுரமும் மண்ணச்சநல்லூரும் திருத்தவத்துறை என்ற லால்குடியும் பிடிக்கப்பட்டன.

புதுச்சேரியிலிருந்து ட்யூப்ளே அனுப்பிய பிரஞ்சார் ஊட்டத்தூர்வந்து சேர்ந்தார். அவரைத் தெற்கே வராமல் தடுக்க க்ளைவ் சென்றான். அவனைப் பின்புறமிருந்து தாக்க ஸ்ரீரங்கத்திலிருந்த பிரஞ்சார் சென்றனர். க்ளைவ் ஊட்டத்தூர் போகாமல் சமயபுரத்திலேயே தங்கிவிட்டான். ஸ்ரீரங்கத்திலிருந்துவந்த பிரஞ்சார் பாதிராத்திரியில் சமயபுரத்தை யடைந்தார். வெகு சாமர்த்தியமாய் க்ளைவ் அவரைத் தோற்கடித்து எல்லோரையும் சிறையோ கொலையோ செய்துவிட்டான். டால்டன் ஊட்டத்தூரில் பிரஞ்சாரை எதிர்க்க அவர் ரஞ்சன்குடிக்கு ஓடினர். க்ளைவும் டால்டனும் மறுபடியும் அவரைத்தாக்க அவர் சரணமடைந்தனர்.

பிறகு க்ளைவ் பிக்ஷாண்டார் கோவிலுக்குச் சென்றான். பிரஞ்சார் தங்கியிருந்த கோவிலுக்கு 200 கஜம் வடக்கேயுள்ள கிராமத்திலிருந்துகொண்டு தன் பீரங்கிகளால் அக் கோவிலையும் முழு வெள்ளத்துடன் இருந்த கொள்ளிடத்திற்குத் தென்புரமுள்ள ஸ்ரீரங்கம் கோவிலையும் தாக்கி

னன். ஸ்ரீரங்கமும் பிடிக்கப்பட்டது. சண்டாசாஹிப் ஸைன்யம் சரணமடைந்தது. அவனும் நிர்க்கதியாய் இங்கிலீஷருக்கு உதவிசெய்துகொண்டிருந்த தஞ்சாவூர் சேனுபதியைச் சரணமடைந்தான். அவன் அவனைக் கொன்று தலையைத் தஞ்சாவூருக் கனுப்பிவிட்டான். பிரஞ்சாரும் சரணமடைந்தனர். சண்டா சாஹிப்பின் தலையில்லாமுண்டம் திருச்சினுப்பள்ளியில் நத்தர்ஷா பள்ளிவாசலில் புதைக்கப்பட்டது.

டால்டனை ஒருசிறு ஸேனையுடன் திருச்சியில் நிறுத்திவிட்டு லாரென்ஸ் சென்னைக்குப் புறப்பட்டான்.

---

## 13-ம் அதிகாரம்.

### ஆங்கிலோ பிரஞ்சு கர்னுடக இரண்டாவது யுத்தம்.

ட்யூப்ளேயின் சூழ்ச்சியினுல் மைசூராரும் முராஹரிராவும் மஹமடாலி கக்ஷியைவிட்டு நீங்கினர். டால்டன் மைசூராரை ஸ்ரீரங்கத்தில் தாக்கினுன். அவன் தோற்கடிக்கப்பட்டு திருச்சிக்கு ஓடிவர (1675), அவரால் வளைந்து கொள்ளப்பட்டான். திருவையாற்றில் பிரஞ்சு, மஹாராஷ்ட்ரருடன் சண்டைசெய்துகொண்டிருந்த லாரென்ஸ் திருச்சிக்கு வந்தான். அதே சமயத்தில் மைசூராருக்கு உதவிசெய்ய பிரஞ்சு மஹாராஷ்ட்ர ஸைன்யங்களும் வந்தன.

ஸ்ரீரங்கத்திலிருந்த பிரஞ்சு மைசூராரை லாரென்ஸ் முத்தரசநல்லூரிலிருந்து தாக்கினுன். ஒன்றும் பலிக்கவில்லை. பிரஞ்சாரிடம் யுத்தப்பயிற்சிபெற்ற தகுந்த தலைவர் பலர் இருந்தனரென்பதும் ஸ்ரீரங்கத்தைவிட்டு அவர்களைத் துரத்த முடியாதென்பதும் லாரென்ஸுக்குப் புலப்

பட்டது. பிறகு அவன் பக்கிரித் தோப்பில் தங்கினன். புதுக்கோட்டை, தஞ்சாவூருடன் அவன் போக்குவரவு செய்வதைத் தடுக்க பிரஞ்சார் அவனுக்குத் தென்புரம் தங்கினர். லாரென்ஸ் பக்கிரிப்பாறைக்குச் சென்றான். அங்கிருந்து அவன் துரத்தப்படவே, நின்று யுத்தம் செய்தான். பிரஞ்சார் தோற்கடிக்கப்பட்டு அந்த ப்ரதேசத்தைவிட்டு நகந்தனர்.

டால்டனைத் திருச்சியில் வைத்துவிட்டு லாரென்ஸ் தஞ்சாவூருக்குச் சென்றுத் திரும்புகையில் பிரஞ்சார் அவனைத்தடுக்கும் பொருட்டு பிரஞ்சுப் பாறையிலிருந்து பக்கிரிப்பாறைவரையிலும் நின்றார். லாரென்ஸ் அவரைத் தோற்கடித்துத் திருச்சிக்குள் வந்தான்.

உய்யக்கொண்டான் திருமலையில் தங்கியிருந்த பிரஞ்சாரைத் தாக்கச்சென்றான் லாரென்ஸ். அவர் முத்தரசநல்லூருக்கு ஓடினர். லாரென்ஸ் மலையைப் பிடித்துக்கொள்ளாததால் அவர் திரும்ப வந்துவிட்டனர்.

காவேரிக்குத் தெற்கிலேயே இருந்துகொண்டுத் தங்களுக்குச் சாமான்கள் வந்துசேருவதை பிரஞ்சார் தடுத்துக்கொண்டே யிருந்ததால் லாரென்ஸ் பெருமுயற்சியெடுத்து அவரைத்தாக்க பிரஞ்சுபாறையில் தங்கினன். பிரஞ்சாரும் கற்கண்டுப் பாறையில் தங்கினர். நடந்த யுத்தத்தில் பிரஞ்சார் தோற்கடிக்கப்பட்டு காவேரிக்கு வடக்கே துரத்தப்பட்டனர்.

உய்யக்கொண்டான் திருமலையிலிருந்த பிரஞ்சாரும் லாரென்ஸால் துரத்தியடிக்கப்பட்டனர்.

பிறகு லாரென்ஸ் தஞ்சாவூருக்குச் சென்றான். பிரஞ்சார் கடைசியாக திருச்சிக்கு வர ஒரு இராமுயற்சியெடுத்து கோட்டைக்கு வடமேற்கிலிருந்த டால்டன் பாட்டெரி

யைத் தாக்கினர். இந்த பாட்டெரியைச்சுற்றி ஒரு அகிழும் அகிழில் ஒரு பாறையுமிருந்தன. கோட்டையின் வெளிச்சுவற்றிற்கு வெளியேயிருந்த இந்த பாட்டெரியிலிருந்து தெப்பக்குளத்தின் தென்மேற்கு மூலையிலுள்ள மெய்ன் கார்ட்கேட் வரையில் பந்தோபஸ்து செய்யப்பட்டிருந்தது. வெளிச்சுவருக்கும் உள்சுவருக்கும் மத்தியில் வளைந்து வளைந்து சென்ற ஒரு பாதைவழியேதான் கோட்டை மேலவாசலுக்கு வரக்கூடும்.

அகிழில் பாறையிருந்ததால் இரவில் சுலபமாய் ஏணிகளைக்கொண்டு பிரஞ்சார் பாட்டெரிமேல் ஏறிவிட்டனர். தூங்கிக்கொண்டிருந்த காவலாளிகளைக் கொன்றுவிட்டு சத்தம் செய்யாமல் பீரங்கிகளைக் கைப்பற்றினர். சிலர் இருட்டில் வாசலுக்குவர யத்தனித்ததில் அகஸ்மாத்தாய் ஒரு குழியில் விழுந்து உதவிக்குக் கத்தினர். பாட்டெரிமேலிருந்த பீரங்கிகளும் கோட்டையின்பேரிலேயே திருப்பப்பட்டன.

லெப்டினனட் ஹாரிஸன் கேட்டின் மேல்சுவரில் ஏறி நின்றான். பிரஞ்சாரில் சிலர் வெளிச்சுவருக்கும் உள்சுவருக்கும் மத்தியிலுள்ள பாதைவழியே கதவை உடைக்க இருப்புலக்கைகளுடன் வந்தனர். ஆங்கில ஸேனையிலிருந்து ஓடிவிட்ட ஒருவன் அவருக்கு வழிகாட்டினான். வேறு சிலர் ஏணிகளைக்கொண்டு சுவரேற யத்தனித்தனர். கேட்டின்மேலிருந்த இங்கிலீஷார் இருட்டில் ஒன்றும் தெரியாமல் சுட்டுக்கொண்டே யிருந்தனர். தெய்வ ஸங்கல்பமாய் வழிகாட்டியும் இருப்புலக்கைக்காரரும் கொல்லப்பட்டனர்; ஏணிகளும் ஒடிந்துவிட்டன; பிரஞ்சாரும் பயந்து திரும்பியோடினதில் அகிழிலும் பாறையின்மேலும் குதித்து தங்களையே காயப்படுத்தி அல்லது கொன்று கொண்டார்கள். பாட்டெரியிலிருந்தவர் கோட்டையின்

பேரில் சுட்டுக்கொண்டேயிருந்தார்கள். ஆங்கிலரும் சுட்டுக்கொண்டேயிருந்தார், இரு கக்ஷியாரும் சூரியோதயத்தை ஆவலுடன் எதிர்பார்த்தனர். பொழுதும் விடிந்தது. பிரஞ்சாரும் சரணமடைந்தார். தெய்வாதீனமாய் குழியில்லாமலிருந்தாலும் இருப்புலக்கைக்காரர் கொல்லப்படாமலிருந்தாலும் வழிகாட்டி இறக்காமலிருந்தாலும் பிரஞ்சார் ஜயமடைந்திருப்பர்.

1676-ல் தை மாசத்தில் தஞ்சாவூரிலிருந்து சாமான் கொண்டுவந்த ஆங்கில சைன்யம் அனுபோகமில்லாத சேனுபதியின் முட்டாள் தனத்தால் தோற்கடிக்கப்பட்டது. கூத்தப்பாரில் ஆங்கிலரை மஹாராஷ்ட்ரரும் மைசூராரும் பிரஞ்சு உதவியைக்கொண்டு எதிர்த்தனர். ஆங்கிலருள் அனேகர் கொல்லப்பட்டு 150 பேர் வரையில் கைதிசெய்யப்பட்டனர். திருவெறும்பூரிலிருந்து உதவிக்கு வந்தவராவது ஏக காலத்தில் ஒரே கூட்டமாய் வந்திருக்கலாம். அப்படியுமில்லை.

அதே வருஷம் சித்திரை மாசம் 31-ம் தேதி பொன்மலைக்கருகில் நடந்த மற்றொரு சண்டையில் பிரஞ்சார் துரத்தியடிக்கப்பட்டனர்.

பிறகு பிரஞ்சார் புதுக்கோட்டைக்குள் சென்று சில கிராமங்களைக் கொளுத்தினர். ஆங்கிலருக்கு உதவிசெய்த தப்பிதத்திற்காக தொண்டமானை தண்டிக்கமுடியாமல் போனதால் கிளியூரையும் கோவிலடியையும் பிடித்துக்கொண்டு காவேரிக்கும் கொள்ளிடத்துக்கும் நடுவேயுள்ள கரையை இடித்தனர். எதிர்த்து வந்த தஞ்சாவூராரும் தோற்கடிக்கப்பட்டனர். இந்த சமயத்தில் முராஹரி ராவ் கர்னுடகத்தைவிட்டு வடக்கே சென்றான்.

லாரென்ஸ் மறுபடியும் தஞ்சாவூருக்குச் செல்லும்வழியில் பொன்மலைக்குச் சமீபத்தில் எதிர்க்கப்பட்டான். பிர

ஞ்சார் தோற்கடிக்கப்பட்டனர். சண்டையினுல் அனுப்பவடைந்த பிரஞ்சு கவர்ன்மெண்டார் ட்யூப்ளேயை ஊருக்கழைத்தார்கள். சமாதானம் செய்துகொள்ளப்பட்டு சண்டையும் நிறுத்தப்பட்டது.

---

## 14-ம் அதிகாரம்.

### ஆங்கிலோ-பிரஞ்சு கர்னுடக மூன்றுவது யுத்தம்.

1677-ல் நிஜாம் மைசூரின்மேல் படையெடுத்தான். ஆகையால் மைசூரார் ஸ்ரீரங்கத்தை விட்டகன்றனர். திருச்சிக்கருகாமையிலிருந்த பிரஞ்சார் கப்பம் வாங்கும் பொருட்டு துரையூர் ஜமீனைத் தாக்க யத்தனித்தனர். அரியலூருக்குள்ளும் உடையார்பாளையத்துக்குள்ளும் செல்ல ஏற்பாடுகளும் செய்யப்பட்டன. ஆங்கில சேனைத் தலைவன் கெய்ல்லாட் அவரைப் பயமுறுத்தி வடக்கே போகாமல் தடுத்துவிட்டான்.

1679-ல் கர்னுடகத்தில் இரு தேசத்தாரும் மறுபடியும் யுத்தம் செய்தனர். கெய்ல்லாட் மதுரையிலிருந்தான். பிரஞ்சு சேனை திருச்சிக்கு வந்தது. பிரஞ்சாரை சாமர்த்தியமாய் ஏமாற்றிவிட்டு கெய்ல்லாட் திருச்சிக்கு வந்தான். ஒன்றும் செய்யாமல் பிரஞ்சாரும் புதுச்சேரிக்குப் போய்விட்டனர்.

1680 சித்திரையில் பிரஞ்சார் ஸ்ரீரங்கத்தை ஹைடர் அலியின் சகோதரனிடம் விட்டுவிட்டு தாம் வேறு பக்கம் சென்றனர். ஜோசப் ஸ்மித் மைசூரரைத் துரத்திவிட்டு ஸ்ரீரங்கத்தைப் பிடித்துக்கொண்டான்.

வைகாசி மாசக்கடைசியில் புதிதாய்வந்த பிரஞ்சு கவர்னர் கௌண்ட் டி லாலி தாஞ்சாவூரைத் தாக்கி முற்றும்

தோல்வியடைந்தான். யுத்தரங்கம் பிறகு மாறிவிட்டது. லாலியும் செண்ட் டேவிட் கோட்டையைப் பிடித்துக் கொண்டு சென்னையை முற்றுகை போட்டான்.

1681-ல் பிரஞ்சார் ஊட்டத்தூர் வரையில் சென்றனர். சிலமாதங்கழித்து ஸ்ரீரங்கத்தைப் பிடித்துக்கொண்டு பிக்ஷாண்டார் கோவிலைப் பந்தோபஸ்துப்படுத்தினர். திருச்சியிலிருந்து காப்டன் ரிச்சர்ட் ஸ்மித் வடக்கே சென்று, சமயபுரத்திலிருந்து தனக்கு உதவிக்காக வந்த சேனையைச் சேர்த்துக்கொண்டு, பிக்ஷாண்டார் கோவிலைத் தாக்கினான். பிரஞ்சு பீரங்கிகளின் உக்ரத்தைத் தாங்கமுடியாமல் ஆங்கிலர் பின் வாங்கினர். வாண்டிவாஷில் பிரஞ்சார் தோற்றுப்போன செய்தி வந்தமையால் அவர்தாமே பிக்ஷாண்டார் கோவிலைவிட்டு விலகினர்.

1682-ல், பிரஞ்சாருக்கு ஹைடர் உதவி செய்ததின் நிமித்தம், காப்டன் ரிச்சர்ட் ஸ்மித் மைசூராருக்குச் சொந்தமான கரூரைத் தாக்கினான். கரூரிலிருந்த சேனைத்தலைவன் தனக்கும் ஹைடருக்கும் சம்பந்தமில்லையென்றும் தான் மைசூர் அரசன் ஆதரவினின்று விலகிவிட்டதாகவும் சொல்லிக்கொண்டு ஊரைக் காலிசெய்துவிட்டு மைசூராருடைய நாமக்கல்லுக்குச் சென்றான்.

1683 தை மாசத்தில் ஸர் ஐர் கூட் புதுச்சேரியைப் பிடித்தமையால் பிரஞ்சார் தம் மஹிமை பூராவையுமிழந்தனர். இரண்டு வருஷம் கழித்து பாரிஸ் நகரத்தில் உடன்படிக்கை செய்யப்பட்டது. மஹம்மடாலியைக் கர்நாடக நவாப்பாக பிரஞ்சார் ஒப்புக்கொண்டனர். கரூரை இங்கிலீஷாரும் நாமக்கல்லை மைசூராரும் வைத்துக்கொண்டனர்.

## 15-ம் அதிகாரம்.

### மைசூருடன் சண்டை.

ஹைடர் அலி மைசூர் சிம்ஹாசனத்தையடைந்து தன் அதிகாரத்தை விர்த்தி செய்தபடியால் இங்கிலீஷார் பயந்து 1688-ல் அவனுக்கு விரோதமாய் நிஜாமுக்கு உதவிசெய்வதாய் ஒப்புக்கொண்டார். 1690 சித்திரை மாசத்தில் ஹைடர் மலையாளத்துக்குச் சென்றிருந்தபோது நாமக்கல்லும் இன்னும் சில கிராமங்களும் ஆங்கிலரால் பிடிக்கப்பட்டன. 1691-ல் ஹைடர் கரூருள்பட தன் ஊர்கள் எல்லாவற்றையும் திருப்பிக்கொண்டான்.

1703-ல் ஹைடர் மறுபடியும் திருச்சியில் ஆங்கிலரை எதிர்த்தான், ஸர் ஐர்கூட் வடக்கேயிருந்து வந்ததால் திரும்பி விட்டான். கூட் ஹைடரைப் பரங்கிப்பேட்டையில் (Porto Novo) தோற்கடித்தான். 1704-ல் ஹைடர் இறந்தான். 1705-ல் கரூர் ஆங்கிலர் கைக்கு வந்தது. 1706-ல் சமாதானம் செய்யப்பட்டு கரூர் டிப்புவுக்கு கொடுக்கப்பட்டது.

1712-ல் ஆங்கிலர் மறுபடியும் கரூரைப் பிடித்துக் கொண்டனர். டிப்பு கரூர் மார்க்கமாய் திருச்சிக்கு வந்து ஸ்ரீரங்கத்தையழித்தான். இதற்குள் மைசூருக்குள் கார்ன்வாலிஸ் நுழைந்துவிட்டதால் டிப்பு திரும்பினான். 1714-ல் நடந்த உடன்படிக்கைப்படி கரூர் டிப்பு வீதத்திற்கும் நாமக்கல் ஆங்கிலர் வீதத்திற்கும் கிடைத்தது.

1721-ல் கரூர் மறுபடியும் ஆங்கிலரால் பிடித்துக் கொள்ளப்பட்டது. ஸ்ரீரங்கப்பட்டணம் பிடிக்கப்பட்டு டிப்புவும் இறந்தபடியால் சண்டை நிறுத்தப்பட்டது. பிறகு ஏற்பட்ட சமாதான உடன்படிக்கைப் பிரகாரம் கரூரை ஆங்கிலரே வைத்துக்கொண்டனர்.

## 16-ம் அதிகாரம்.

### ஆங்கில கம்பேனி.

1703-ல் மஹம்மடாலி, ஹைடருடன் நடந்த சண்டையின் செலவிற்காக, கர்ணடக நிலத்தீர்வையை ஐந்து வருஷத்திற்கு ஆங்கிலரிடம் ஒப்படைத்தான். 1707-ல் சீமையிலுள்ள கம்பெனியின் டைரெக்டர்கள் அவ்வொப்படைத்தலை ரத்து செய்துவிட்டனர். 1712-ல் சமாதான உடன்படிக்கை யொன்றுமேயில்லாமல் ராஜ்யம் தங்களுடையதென்று தண்டோரா மூலமாய் ஜனங்களுக்கு அறிவித்து கம்பெனியார் கர்ணடகத்தை யடைந்தனர்.

1714-ல் ஆங்கிலர் நவாப்புடன் செய்துகொண்ட ஏற்பாட்டின்படி வருஷம் ஒன்றுக்கு ஒன்பது லக்ஷம் வராஹன் செலவில் ஒரு ஆங்கில ஸேனையை நவாப் வைத்துக் கொள்வதாய் ஒப்புக்கொண்டான். 1717-ல் மஹம்மடாலி இறந்தான். அவன் சரீரம் திருச்சிறுப்பள்ளியில் நத்தர்ஷா பள்ளிவாசலில் புதைக்கப்பட்டிருக்கிறது. 1721-ல் ஸ்ரீரங்கப்பட்டணம் பிடிக்கப்பட்டபொழுது மஹம்மடாலிக்கும் டிப்புவுக்கும் நடந்த ஆங்கிலருக்கு துரோஹமான கடிதப் போக்கு வரத்து கண்டுபிடிக்கப்பட்டது. 1723-ல் மஹம்மடாலியின் மருமகன் அஸீமுட்டௌலாவிடம் கர்ணடக ராஜ்யம் தனக்கு வேண்டாமென்றும் தனக்கு பென்ஷன் கொடுத்தால் போதுமென்றும் ஆங்கிலர் வர்த்தமானம் பெற்று ராஜ்யத்தையடைந்தார். ஆடி மாஸக்கடைசியில் (A. D. 1801 August) ஒரு ஆங்கில கலெக்டர் திருச்சிறுப்பள்ளியை ஒப்புக்கொண்டான்.

1780-ல் கம்பெனியின் ஆக்ஷியை இங்கிலாந்து ராணி ஒப்புக்கொண்டாள். 1788-ல் (A. D. 1866) திருச்சிறுப்பள்ளியில் முனிசிபல் கௌன்ஸில் ஏற்பட்டது. 1795-ல்

(A. D. 1873) இப்பொழுது கவர்ன்மெண்டு ஹெட்குவார்ட்டர் ஹாஸ்பிட்டல் என்று சொல்லப்படும் வைத்தியசாலையும் அதற்கு கிழக்கில் ஒரு மணிக்கூண்டும் திருச்சினுப்பள்ளி முனிசிபாலிட்டியாரால் கட்டப்பட்டது. 1797-ம் (December A. D. 1875) வருஷத்தில் இங்கிலாண்டு யுவராஜன் (பிறகு எட்வர்ட் VII மன்னன்) திருச்சிக்கு வந்ததின் அடையாளமாக ஒரு வளைவு சுவர் (arch) கட்டப்பட்டது. *

---

## 17-ம் அதிகாரம்.

### தற்கால அரசாக்ஷி.

இங்கிலாண்டரசன் கிரீடத்தில் விளங்கும் விலையுயர்ந்த ரத்நம் நம் பாரததேசம். அம்மன்னனுக்கு இந்தியா சக்ரவர்த்தியெனப் பெயருமுண்டு. தலைநகரமாகிய லண்டனிலிருந்து பார்லிமெண்டு சபைகளின் உதவியைக் கொண்டு எல்லாக்கண்டங்களிலுமுள்ள தன் நாடுகளில் ஆக்ஷி செலுத்துகின்றனக் கோமான். இந்தியாவை ராஜப்பிரதிநிதியாயிருந்து ஆளுவதற்கு 5 வருஷத்திற்கொரு முறை ஒரு ஆங்கில சீமான் அனுப்பப்படுவது வழக்கம். அவனுக்கு உதவிபுரிய ஒரு சபை உண்டு (Executive Council). அச்சபையின் அங்கத்தினருள் ஒருவன் இந்தியன்.

---

* 1784-ல் (11th March A. D. 1862) தஞ்சாவூரிலிருந்து திருச்சினுப்பள்ளி ஜங்ஷன் மார்க்கமாய் திருச்சினுப்பள்ளி கோட்டைவாயிலும் 1788-ல் (3rd December A. D. 1866) திருச்சினுப்பள்ளி கோட்டையிலிருந்து கரூர் வரையிலும் 1797-ல் (1st September A. D. 1875) திருச்சினுப்பள்ளி ஜங்ஷனிலிருந்து மதுரை வரையிலும் இருப்புப்பாதைகள் போடப்பட்டன.

பாரததேசம் 10 மாகாணங்களாய்ப் பிரிக்கப்பட்டு ஒவ்வொரு மாகாணத்திற்கும் ஒரு கவர்னர் நியமிக்கப்படுகிறான். இக்கவர்னர் பதவி ஆங்கிலச் சீமானுக்குத்தான் கிடைக்கும். சில வருஷங்களுக்கு முன் லார்ட் ஸின்ஹா என்ற ஒரு இந்தியனுக்கு இப்பதவி ஸ்வல்பகாலத்திற்கு கிடைத்தது. கவர்னர்ஜெனரலுக்கு இருக்கும் மாதிரி கவர்னருக்கும் Executive Council உண்டு. அதிலும் ஒரு இந்தியன் இருக்கிறான்.

இந்தியாவை ஆளுவதில் சர்க்காருக்கு சட்டதிட்டங்கள் செய்வதில் உதவி செய்ய 4 (சம்பளம் இல்லாத அங்கத்தினருள்ள) சபைகள் உண்டு. இவைகளுள் Legislative Council என்பது ஒவ்வொரு மாகாணத்திலும் ஏற்பட்டிருக்கிறது. இந்தியா முழுவதற்கும் பொதுவாயுள்ளது Legislative Assembly-யும் Council of State-ம். ஸ்வதேச சிற்றரசர்களின் சபையொன்றும் உண்டு.

நாமிருக்கும் சென்னை ராஜதானி 25 ரெவினியூ ஜில்லாக்களாய் பிரிக்கப்பட்டு ஒவ்வொரு ஜில்லாவிற்கும் ஒரு கலெக்டர் நியமிக்கப்பட்டிருக்கிறான். கலெக்டர் ரெவினியூ டிபார்ட்மெண்டு அதிகாரியாய் இருந்தபோதிலும் ஜில்லாவின் க்ஷேமத்துக்கு உத்தரவாதி அவன்தான். அவசியம் ஏற்பட்டால் அவன் சம்பந்தமல்லாத இதர டிபார்ட்மெண்டு உத்தியோகஸ்தரும் அவனுக்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டும்.

Revenue Department :—திருச்சிராப்பள்ளி கலெக்டரின் அதிகாரம் 5 டிப்டி கலெக்டர்கள் 6 தாசில்தார்கள் 12 ஸப்மாஜிஸ்ட்ரேட்டுகள் மூலமாய் நடத்தப்படுகிறது. திருச்சி ஜில்லாவில் கஜானா அதிகாரி Treasury Deputy Collector. ஸர்க்காருக்காக கஜானா வேலை செய்ய திருச்சியில் ஒரு Imperial Bank of India-வின் கிளையுமிருக்

கிறது. திருச்சி தாலூகாவில் அதிகாரம் செலுத்துபவர் Head Quarter Division Deputy Collector-ம் தாசீல் தாரும். குளித்தலை-கரூர், லால்குடி-முசிரி, பெரம்பலூர்-உடையார்பாளையம், இவைகளுக்கு மூன்று டிவிஷன் டிப்டி கலெக்டர்களும் 6 தாசில்தார்களும் உண்டு. தாசீல்தார் அதிகாரத்துக்குக் கீழ்ப்பட்டது தாலூகா. ஒவ்வொரு தாலூகாவிலும் பல கிராமங்கள் உண்டு. கிராம அதிகாரிகளை மேல்பார்வை செய்ய தாசில்தாருக்குக்கீழ் பல ரெவினியூ இன்ஸ்பெக்டர்களும் இருக்கிறார்கள்.*

கிராமம்தான் unit of administration. கிராமத் தலைவன் முன்சீப். கிராம நிலங்களை அளவு செய்து பயிர்களைச் சோதித்து ஸர்க்கார் வாயிதாக் கணக்கு செய்பவன் கணக்குப்பிள்ளை. இவர்கள் இடும் வேலையைப் பார்க்க வெட்டியான், தலையாரி முதலிய வில்லேஜ் போலீஸும் ஏற்பட்டிருக்கின்றன. சர்க்கார் கிஸ்தியை வசூல் செய்வது தான் முன்சீப்பின் முதல் வேலை. கிஸ்திபணம் தாலூகா கஜானாவுக்கு அனுப்பப்படும். அங்கிருந்து ஜில்லா கஜானாவுக்கும் பட்டணம் அக்கவுண்டண்டுஜெனரலுக்கும் அனுப்பப்படும். முன்சீப்புக்கு சிறு குற்றங்களைப்பற்றி நியாய விசாரணை செய்யவும் அதிகாரம் உண்டு. அப்பொழுது அவனுக்கு வில்லேஜ் மாஜிஸ்ட்ரேட் என்று பெயர். இந்த வேலையில் இவனுக்கு மேலதிகாரிகள் ஸப்-மாஜிஸ்ட்ரேட், டிப்டி கலெக்டர்-மாஜிஸ்ட்ரேட், ஜில்லா கலெக்டர்-மாஜிஸ்ட்ரேட் முதலியவர்கள். கிராம முன்சீப்புக்கு ஸிவில் நியாய விசாரணை செய்ய அதிகாரமும் உண்டு. தவிர எந்த டிபார்ட்மெண்டு உத்தியோகஸ்தரும் கிராமத்துக்கு வந்தால் அவருக்கு வேண்டிய உதவிசெய்ய கிராம முன்சீப்

* ரெவினியூ டிபார்ட்மெண்டின் மாகாண அதிகாரி சென்னையிலுள்ள ரெவினியூ போர்ட்.

கட்டுப்பட்டிருக்கிறுன். கிராம அதிகாரிகளுக்கு பென்ஷன் கிடையாது.

Judicial Department :—ஸிவில் நியாய விசாரணை செய்ய திருச்சினுப்பள்ளியில் ஒரு ஜில்லா ஜட்ஜியும் ஒரு ஸப்ஜட்ஜியும் 6 டிஸ்ட்ரிக்ட் முன்சீப்புகளும் இருக்கிறுர்கள். இவர்களுள் ஜில்லா ஜட்ஜுக்கு பெருங் குற்றங்களை விசாரிக்கவும் கொலை முதலிய தண்டனைகள் செய்யவும் அதிகாரமுண்டு. இந்த டிபார்ட்மெண்டுக்கு மாகாண அதிகாரி சென்னை ஹைகோர்ட்டு.

Public works Department :—ரோட்டுகள் போடுதல், பாலங்கள் கட்டுதல், ஆறுகளிலிருந்து வாய்க்கால்களில் கிராமபாசனத்துக்கு வேண்டிய ஜலம் விடுதல், முதலிய வேலையைச் செய்பவர் P. W. Department-ஐச் சேர்ந்தவர். ஜில்லா அதிகாரி Executive Engineer. இவருக்குக் கீழ் Sub-Engineer, Supervisor, Overseer, Sub-Overseer, மேஸ்திரி, முதலியவர்கள் உண்டு. நாலைந்து ஜில்லாக்களிலுள்ள Executive Engineer-களுக்கு மேலதிகாரி Superintending Engineer.

Department of Public Instruction:—படிப்பிலாக்காவைக் கவனிக்க ஒவ்வொரு ஜில்லாவிற்கும் ஒரு District Educational Officer-ம் அவனுக்குக் கீழ் பல Deputy Inspector-களும் உண்டு. இவர்களுக்கு மேல்பட்ட மாகாண அதிகாரி Director.

Posts and Telegraphs :—திருச்சி ஜில்லாவில் பல இடங்களில் தபால் ஆபீஸ்களும் தந்தி ஆபீஸ்களும் உள. சிறிய கிராமங்களிலுள்ள தபாலாபீஸ்கள் பிராஞ்சு ஆபீஸ்கள். பெரிய கிராமங்களிலும் பட்டணங்களிலும் உள்ளவை ஸப் ஆபீஸ்கள். திருச்சினுப்பள்ளி கண்டோன்மெண்டி

லுள்ளது ஹெட் ஆபீஸ். இவைகள் கடிதப் போக்கு வரத்து, மணியார்டர், இன்ஷ்யூரன்ஸ், வேலைகளைத் தவிர, ஸேவிங்ஸ் பாங்க் வேலையும் செய்கின்றன. கிராமத்துக்கு கிராமம் மெயில் தூக்கிக்கொண்டுபோக ரன்னர்கள் உண்டு. கனத்த பைகளைக் கொண்டுபோக வண்டிகள், மோட்டார்களும் உண்டு. ரயில் பாதை உள்ள இடங்களுக்கு மெயில் ரயில்வண்டியிலேயே போகும். தபாலாபீஸாரோ தந்தி வேலையையும் பார்க்கின்றனர். தந்தி வேலை செய்யாத தபாலாபீஸ்கள் உள்ள இடங்களில் ரயில் ஸ்டேஷன் இருந்தால் ரயில்வே கம்பெனியார் தந்தி வேலை செய்கிறார்கள். தபாலாபீஸ் வேலையை மேல்விசாரணை செய்பவர் இன்ஸ்பெக்டர், ஸூப்பெரின்டெண்டண்ட், போஸ்ட்மாஸ்டர்-ஜெனரல், டைரெக்டர்-ஜெனரல் முதலியவர்கள். இந்த டிபார்ட்மெண்டு சென்னை கவர்ன்மெண்டாருக்குட்படாமல் Imperial Government-இன் அதிகாரத்தின்கீழ் இருக்கிறது.

Public Health Department :—கிராமங்களிலும் பட்டணங்களிலும் திருவிழாக்கள் நடக்கும்போதும் கூட்டங்கள் கூடும்போதும் ஜனங்களுள் வியாதிகள் பரவாமலிருக்கவும், வந்த வியாதிகளைத் தடுக்கவும், பொதுவாய் ஜன ஸமூகத்தின் தேக சௌக்கியத்தைக் கவனித்துப் பார்க்கவும் ஏற்பட்டது Public Health Department. அம்மை குத்துகிறவர்கள், ஸப் அஸிஸ்டண்ட் ஸர்ஜன், அஸிஸ்டண்ட் ஸர்ஜன், ஜில்லா மெடிகல் ஆபீஸர், முதலியவர்கள் இவ்வேலையைச் செய்கின்றனர்.

Salt and Abkari Department :—ஜனங்கள் திருட்டுத்தனமாய் உப்பு உண்டாக்காமலும் கள்ளு, சாராயம் முதலியவை உண்டாக்காமலும், கள்ளுக் கடைகளைப் பரிசோதனை செய்யவும் ஏற்பட்டவர் இந்த இலாக்காக்காரர். இதன்

அதிகாரிகள் ஸப் இன்ஸ்பெக்டர்கள், இன்ஸ்பெக்டர்கள், Deputy Commissioner, கமிஷனர், முதலியவர்கள்.

Forest Department :—ஆற்றுப்படுகைகளிலும் இன்னும் மற்றுமுள்ள ஸர்க்கார் பாரஸ்டுகளைக் கவனிப்பவர் டிஸ்டிரிக்ட் பாரஸ்டு ஆபீஸரும் ரேஞ்சர்களும்.

Registration Department :—ஜனங்கள் ஒருவருக்கொருவர் எழுதிக்கொடுக்கும் தஸ்தாவேஜுகளைப் பதிவு செய்பவர் இந்த இலாக்காக்காரர். திருச்சியில் இருப்பவர் District Registrar. அங்கங்கே கிராமங்களிலிருப்பவர்கள் Sub-Registrars. இந்த இலாக்காவின் மாகாண அதிகாரி Inspector-General.

Police Department :—இந்த ஜில்லாவில் போலீஸ் வேலை செய்பவர் District Superintendent-ம் அவருக்குக் கீழ் Deputy Superintendents, Inspectors, Sub-Inspectors, Head Constables, Constables-ம் ஆம். இவர் வேலை குற்றங்கள் நடக்காமல் தடுக்கவும், நடந்த குற்றங்களை கண்டுபிடிக்கவும் ஆகும். பெருங் குற்றவாளிகளை நியாய விசாரணை தீருமட்டும் மாஜிஸ்ட்ரேட்டின் உத்தரவின்மேல் ஜெயிலில் வைக்க (Remand செய்ய) இவர்களுக்கு அதிகாரமுண்டு. இவர்களே ஜெயில், கஜானு, முதலியவைகளைக் காக்கவேண்டும். பட்டணங்களிலும் கிராமங்களிலும் இராக்காலங்களில் திருட்டு நடக்காமல் ரோந்து சுற்றிப் பார்ப்பதும் இவர் வேலைதான். இவர்களால் முடியாவிட்டால் ராணுவ உத்தியோகஸ்தர் இவருக்கு உதவிசெய்ய வேண்டும்.

Military Department :—இந்தியா கவர்னர்-ஜனரலுக்கு அடுத்தபடியாய் சம அதிகாரம் பெற்ற Commander-in-Chief-னுடைய உத்தரவுக்குக் கீழ்ப்படிந்து

நடக்கவும் ஸிவில் உத்தியோகஸ்தருக்கு வேண்டும்போது உதவிசெய்யவும் பெருங் கலகங்கள் முதலியவற்றை யடக்கவும் கூட்டக் கொள்ளைக்காரரைப் பிடிக்கவும் தேச விரோதிகளுடன் போர் செய்யவும் ஏற்பட்டவர் ராணுவத்தார். தென்னிந்தியாவில் சென்னை, திருச்சி, பாளையங்கோட்டை, கொச்சி, வெல்லிங்டன், திருவனந்தபுரம், பெங்களூர் முதலிய இடங்களில் ஸைன்யங்கள் இருக்கின்றன. இந்தியா கவர்ன்மெண்டு உத்தியோகஸ்தருள் மிகவும் கவுரவம் பொருந்தியவரும் நன் மதிக்கப்படுபவரும் ராணுவத்தாரே.

Local Boards and Municipalities :—திருச்சினுப் பள்ளி ஜில்லாவில் திருச்சி, ஸ்ரீரங்கம், கரூர்களில் முனிஸிபாலிட்டிகளும், ஒவ்வொரு தாலூகாவிலும் ஒரு தாலூகா போர்டும் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. இவைகள் ஜனங்களிடம் வீட்டு வரி, தொழில் வரி, தண்ணீர் சாக்கடை வரி, கக்கூஸ் வரி, படிப்பு வரி, ரோட்டு வரி, முதலிய பல வரிகளை வசூல் செய்து அப்பணங்களைக்கொண்டு தாமே Government Department-களின் மேல்பார்வையின் கீழ் ரோட்டுகள் போடவும், தெருக்களை சுத்தம் செய்யவும், வீதிகளில் இராக்காலங்களில் வெளிச்சம் போடவும், தண்ணீர்க் குழாய்கள் வைக்கவும், கிணறுகள், குளங்கள் வெட்டவும், ஹாஸ்பத்திரிகள் மூலமாய் ஜனங்களுக்கு வைத்தியம் செய்யவும், குழந்தைகளுக்கு அம்மை குத்தவும், இரண்டு மூன்று கிளாஸ் வரையில் படிப்பு கற்றுக்கொடுக்கவும், இந்த மாதிரி இன்னும் பல ஜன ஊழிய வேலைகள் செய்யவும் அதிகாரம் பெற்றிருக்கின்றன. தாலூகா போர்டுகளுக்கெல்லாம் மேல்பட்டது டிஸ்ட்ரிக்ட் போர்டு. இந்த ஜில்லாவில் டிஸ்ட்ரிக்ட் போர்டு மூன்று ஹைஸ்கூல்களையும் நடத்துகிறது. டிஸ்ட்ரிக்ட் போர்டும், தாலூகா போர்டுகளும், முனிஸிபாலிட்டிகளும் ஜனங்களால் பொறுக்கியெடுக்கப்பட்ட சில

(சம்பளமில்லாத) கௌரவ அதிகாரிகளால் நடத்தப்படுகின்றன. தாலூகா போர்டுக்குக் கீழ் பெரிய கிராமங்களில் முனிஸிபாலிட்டிகள் மாதிரியே யூனியன் போர்டுகளுமுண்டு. இவைகளே ஜனங்களுக்கு ஆளும் திறமையை உண்டுபண்ணக்கூடியவை என்றும் பாரத தேசத்தில் ஜனஸமூக ஸ்வய ஆக்ஷியின் ஆரம்பமெனவும் கருதப்படுகின்றன. இவைகளை மேல்பார்வையிட்டு குற்றங் குறைகளில்லாமல் சீர்திருத்த ஜில்லா கலெக்டருக்கு அதிகாரமுண்டு.

வருஷத்திற் கொருமுறை இந்தியா கவர்ன்மெண்டார் சென்ற வருஷத்தில் நாடு எவ்விதம் ஆளப்பட்டது என்று ஒரு புஸ்தகம் வெளியிட்டு அப்புஸ்தகத்தை இங்கிலாண்டு ஸர்க்காருக்கு அனுப்பவேண்டியது.



Printed at the St. Joseph's Industrial School Press,
Cantonment, Trichinopoly.—1924.

---

Printed by Rev. Br. Joseph, S.J., Superintendent,
St. Joseph's Industrial School Press, Trichinopoly.—1924.